MR. CHAIRMAN : I have to inform the House that in accordance with the Regulation 2 (1) framed for the holding of elections according to the principle of proportional representation by means of the single transferrable vote, I fix the following programme for election of nine members to the Committee of Privileges for the financial year 1962–63 :—

| | |
|---|---|
| Time and date for the receipt of nominations. | 4 p.m. on 25th April 1962. |
| Time and date for the scrutiny of nominations. | 12 noon on 26th April 1962. |
| Time and date for the withdrawal of nominations. | 4 p.m. on the 26th April 1962. |
| Poll, if necessary .. .. .. | On the 27th April 1962. |

Nomination forms can be had from the Secretary.

(2) ELECTION OF SIX MEMBERS TO THE HOUSE COMMITTEE.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Chairman, Sir, I move—

'That, with reference to rule 173 of the Madras Legislative Council Rules, the Council do proceed on a date to be fixed by the Hon. Chairman to elect six members to be members of the House Committee for the financial year 1962–63'.

MR. CHAIRMAN : The question is—

'That, with reference to rule 173 of the Madras Legislative Council Rules, the Council do proceed on a date to be fixed by the Hon. Chairman to elect six members to be members of the House Committee for the financial year 1962–63'.

The motion was put and carried.

MR. CHAIRMAN : I have to inform the House that in accordance with the Regulation 2 (1) framed for the holding of elections according to the principle of proportional representation by means of the single transferrable vote, I fix the following programme for the election of six members to the House Committee for the financial year 1962–63 :—

| | |
|---|---|
| Time and date for the receipt of nominations. | 5 p.m. on the 25th April 1962. |
| Time and date for the scrutiny of nominations. | 1 p.m. on the 26th April 1962. |
| Time and date for the withdrawal of nominations. | 5 p.m. on 26th April 1962. |
| Poll, if necessary .. .. .. | On 27th April 1962. |

Nomination forms can be had from the Secretary.

VII.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS[a].

MR. CHAIRMAN : Now we will commence the discussion on the Governor's address.

---

[a] Printed as Appendix II on pages 65–68 infra.

24th April 1962]

SRI K. RAJARAM: Mr. Chairman Sir, I beg to move –

'That an humble Address be presented to the Governor that the Members of the Madras Legislative Council thank him for the Address delivered to the Members of the Legislature on the 23rd April 1962'.

The motion was seconded.

SRI K. RAJARAM: சட்ட மன்றத் தலைவர் அவர்களே, நமது மாநில கவர்னர் அவர்கள் நேற்றைய தினம் ஆற்றிய சொற்பொழிவு மிகவும் சுருக்கமாக ஆனால் வெகு விளக்கமாக மாநிலத்தில் கடந்த ஐந்தாண்டுகளில் நடந்திருக்கும் முக்கியமான முன்னேற்றங்களையெல்லாம் எடுத்துக் கூறும் வகையில் அமைந்திருக்கிறது. அத்துடன் ஒரு சில விஷயங்கள் விட்டுப்போய் இருப்பினும் கூட எதிர்காலத்தில் இம்மாநிலத்தின் முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகள் திட்டங்கள் இவற்றை எல்லாம் வெகு விரிவாக எடுத்து சொல்லியிருக்கிறார்கள். கடந்துபோன ஐந்தாண்டுகளில் தேசத்தின் ஏனைய மாநிலங்களில் நடந்திருக்கும் வேலைத்திட்டங்களை நம்முடைய மாநிலத்து வேலைகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நாம் அனைவரும் பெருமைப்படுகிற முறையில் வேலைகள் நடந்திருக்கின்றனவெனச் சொல்லவேண்டும். அது மிகையாகாது. எல்லாத் துறைகளிலும் தேசத்தின் பிரதம மந்திரியாக இருக்கும் ஜவஹர்லால் நேரு அவர்கள் உள்பட நம் மாநிலத்தில் நடக்கும் நிர்வாகத் திறமையை, கல்வி, தொழில், கூட்டுறவு முதலிய துறைகளில் நாம் அடைந்திருக்கும் முன்னேற்றங்கள், ஏனைய மாநிலங்களுக்கு வழிகாட்டியாக இருந்துகொண்டிருக்கிறது என்று சொல்வதை காண்கிறோம். இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு வருஷம் கழிந்துவிட்டது. எதிர்பார்த்ததற்கு மேல் ஐந்துகோடி ரூபாய் அதிகமாக செலவழித்து இருக்கிறோம். பணத்தை செலவழித்தது மட்டும் போதாது. செலவுக்கு தகுந்த முன்னேற்றம் உள்ள காரியங்கள் நடந்திருக்கிறதா என்று பார்ப்போமானால் அதுதான் மற்ற மாநிலங்களுக்கும் நம்முடைய மாநிலத்திற்கும் உள்ள வித்தியாசத்தை எடுத்துக் காட்டுகிறது. செலவுக்கு மேல் அதிகமான பலனை நம் மாநிலத்தில் காண்கிறோம். அதற்குக் காரணம் திறமையான நிர்வாகத்திறமை வாய்ந்த அரசாங்க ஊழியர்கள் உத்தியோகஸ்தர்களைப் பெற்றிருப்பது தான். அவர்களுடைய நிர்வாகத்திறமை இந்த தேசம் மட்டுமல்ல உலகமே புகழும் நிலையில் சென்னை இருந்துக்கொண்டிருக்கிறது என்று சொன்னால் அது எல்லாம் நாம் பெருமைபடுகிற விஷயம். இன்று மட்டுமல்ல, பாரம்பரையாகவே நிர்வாகத் திறமைபெற்று விளங்குவது நமது மாநிலம். அதனால்தான் மற்ற மாநிலங்களுக்கு ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ஒதுக்கப்பட்ட பணம் அந்தந்த வருஷத்தில் செலவழிக்காது, செலவழிக்க முடியாமல் இருக்கும் போது நாம் அதை செலவிட்டு விட்டு மேலும் பணம் வேண்டுமென்று கேட்கும் நிலையில் இருக்கிறோம். அரசாங்கத்தின் திறமையைப் பற்றிச் சொன்னேன். இன்னும் ஒன்று. மக்களுடைய ஒத்துழைப்பு பூரணமாக இருந்தால்தான் அரசாங்கமும் திட்டங்களை நல்ல முறையில் நிறைவேற்றமுடியும் என்பது முக்கியமானது. நமது மாநிலத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் 3 20 p.m.

[Sri K. Rajaram] [24th April 1962

திட்டத்தில் முதல் வருஷத்திற்கான பகுதி நல்லமுறையில் நிறைவேறியிருப்பதற்குக் காரணம் மக்களுடைய ஒத்துழைப்புதான். அதைப் பெறுவதில் அமைச்சரவை ஆற்றிய தொண்டு அனைவரும் பெருமைப்படும் அளவுக்கு இருந்தது. மக்களுடைய தொடர்பைப் பெறுவதற்கு ஓயாமல் சுற்றுப்பயணம் செய்து மக்களின் உற்சாகத்தையும் ஊக்கத்தையும் அதிகப்படுத்தி ஆக்க வேலைகளுக்கான ஒத்துழைப்பைப் பெற்றிருக்கிறார்கள் அமைச்சர்கள். அதைக் கண்டு நாம் மகிழ்ச்சியடைகிறோம்.

1962-ம் வருஷத்தில் இரண்டு பெரிய முக்கியமான பரிசுகள் என்றே சொல்லலாம். முதியோர்களுக்குப் பணம் உதவும் திட்டமும், அடுத்தபடியாக கவர்னர் அவர்களால் அறிவிக்கப்பட்டிருக்கும், மாநிலம் முழுவதும் இந்த ஆண்டிலேயே கட்டாய ஆரம்ப கல்வி அமுலுக்கு கொண்டு வரப்பட இருக்கிறது என்பதுமாகும். வழக்கம்போல் மற்றத் துறைகளைப்போலவே ஆரம்பக்கல்வித் துறையில் கட்டாய ஆரம்பக் கல்வி அமுலுக்குக் கொண்டுவருவதிலேகூட நமது மாநிலம் முந்திக்கொண்டிருக்கிறது. மாநிலம் முழுமையும் எல்லோருக்கும் கட்டாய ஆரம்பக் கல்வி கொடுப்பது என்றால் அது எளிதான காரியம் அல்ல--மிகவும் சிரமமமான காரியம். அதை வெற்றியுடன் நிறைவேற்ற வேண்டுமென்றால் கட்சி பேதம் இல்லாமல் மாநிலத்தில் உள்ள அத்தனைக் கட்சிகளைச் சேர்ந்தவர்களும் இந்த முக்கியமான விஷயத்தில் மனப்பூர்வமாக ஒத்துழைத்தால் தான் இந்தக் கட்டாய ஆரம்பக் கல்வியை வெற்றிகாமாக அமுலாக்கமுடியும். மற்ற ஆக்க வேலைகளில் அரசியல் தலைவர்களில் எத்தனை அபிப்பிராய பேதம் இருந்தாலும் தமிழ் நாட்டுக்கு பெருமை முக்கியமான திட்டங்கள் ஏகமனதாக ஆதரிக்கப்பட்டு நிறைவேற்றப்படுகின்றன என்பது தான். எல்லாக் கட்சிக்காரர்களும் கூடுமான வரையில் ஒத்துழைத்துத்தான் திட்டங்களை நிறைவேற்றிக்கொண்டிருக்கிறோம். இந்த கட்டாய ஆரம்பக் கல்வி திட்டத்தையும் அனைவரும் பேதமில்லாமல் ஒத்துழைத்து மற்ற மாநிலங்களுக்கு வழி காட்டும் வகையில் இந்த வருஷத்திலேயே அமுலாக்கி வெற்றி காண வேண்டும். ஆகையால் ஏனைய கட்சியைச் சேர்ந்தவர்கள் சட்டசபையிலே இருந்தாலும் சரி அல்லது வெளியிலே இருந்தாலும் சரி பரிபூரணமாக ஒத்துழைப்பு கொடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக கவர்னர் அவர்கள் உரையில் பஞ்சாயத்து நிர்வாகம் பற்றி கூறியிருக்கிறார்கள். நமது மாநிலத்தில் சுமார் 12,500-க்கு மேல் இப்போது பஞ்சாயத்துக்கள் அமைக்கப்பட்டுள்ளன. பஞ்சாயத்து இல்லாத கிராமங்களே இல்லை என்று சொல்லலாம். அதில் நகர பஞ்சாயத்துக்கள் மட்டும் (சுமார் 5,000 ஜனத்தொகைக்கு மேற்பட்ட பஞ்சாயத்துக்கள் நகர பஞ்சாயத்துக்களாக அமைக்கப்பட்டு) சுமார் 304 இருக்கின்றன. இந்த நகர பஞ்சாயத்துக்களுடைய நிர்வாகத்தில் இருக்கும் தொல்லைகள் ஓரளவு அரசாங்கம் கவனிக்கவேண்டியிருக்கிறது. பொதுவாக பஞ்சாயத்து என்று சொன்னால் அத்தனையும் பஞ்சாயத்து என்று ஒரே ரகத்தில் வைத்துவிடுவது சரியல்ல.

24th April 1962] [Sri K. Rajaram]

ஒரு சிறு கிராமப் பஞ்சாயத்து தலைவருக்கு இருக்கும் அதிகாரம் பெரிய நகரத்தில் அமைக்கப்பட்டிருக்கும் பஞ்சாயத்தின் தலைவருக்கு இல்லை. கூட்டத்திற்கு தலைமை வகிக்கும் ஒரு உரிமையைத் தவிர பஞ்சாயத்துத் தலைவருக்கு எந்தவிதமான அதிகாரமும் இல்லை எனப் புகார்கள் கூறுகின்றன. அவர்களுக்கும் குறைகள் அதிகமானவை. அடுத்தபடியாக தமிழ்நாடு பஞ்சாயத்து யூனியன் தலைவர் என்ற முறையில் அரசாங்கத்தின் கவனத்திற்கு அதைக் கொண்டுவர விரும்புகிறேன். இப்போது அண்மையில் இந்த பஞ்சாயத்துக்களின் தலைவர்களுக்கும் உப தலைவர்களுக்கும் ஒரு பயிற்சி கொடுக்கவேண்டுமென்று எழுதியிருந்தேன். அரசாங்கம் மனப்பூர்வமாக அதை ஒப்புக்கொண்டு ஒரு திட்டம் தயாரித்துக் கொடுக்கவேண்டுமென்று கேட்டிருந்தார்கள். திட்டம் தயாரித்துக் கொடுத்தோம். அதை அப்படியே ஒப்புக் கொண்டு 23—3—1962-ல் அதற்கு ஒரு ஜி.ஓ. பிறப்பித்திருக்கிறார்கள். இம்மாதம் 25-ம் தேதியிலிருந்து ஒவ்வொரு ஜில்லாவிலும் பிளாக் வாரியாக பஞ்சாயத்துத் தலைவர்களுக்கும் உப தலைவர்களுக்கும் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்திருக்கிறது. இந்தப் பயிற்சி சுமார் 3, 4 மாதங்களில் எல்லா ஜில்லாக்களிலும் முடியும். பஞ்சாயத்துத் தலைவர்கள் உப தலைவர்களுக்கு மூன்று நாட்கள் பயிற்சி. ஒரு ஜில்லாவுக்கு ஒரு பயிற்சி ஆசிரியரை நியமித்திருக்கிறார்கள். தமிழ்நாடு பஞ்சாயத்து யூனியன் மேற்பார்வையிலே அரசாங்கம் அதை நடத்துகிறது. அந்த பொறுப்பை தமிழ்நாடு பஞ்சாயத்து யூனியனிடம் கொடுத்து அதன் கிளைகளாக இருக்கும் தாலூகா பஞ்சாயத்து சங்கங்கள் மூலமாக அது நடத்திக்கொண்டிருக்கிறது. ஐந்தாயிரம், ஆறாயிரம் செலவு செய்து பயிற்சி அளித்து உடனே 1963-ல் தேர்தல் வைத்தால் பயிற்சி பெற்றவர்கள் விஷயத்தில் என்ன காரியத்தை நாம் சாதிக்க முடியும் என்று யோசிக்கவேண்டியிருக்கிறது. அடுத்த வருஷம் பஞ்சாயத்துத் தலைவர்களின் தேர்தலை வைத்து அதன்வாயிலாக தலைவர்கள் மாற்றம் ஏற்பட்டால் இந்தப் பயிற்சி நடத்துவதில் பயனே இல்லாமல் போய்விடும். கிராமங்களில் பயிற்சி பெற்ற தலைவர்கள் நிர்வாகத்தை நடத்தும் நிலையில் கொஞ்ச நாட்கள் இருந்தே ஆகவேண்டும். ஓரிரு வருஷங்கள் அவர்கள் நிர்வாகத்தை நடத்தியபிறகாவது தேர்தல் நடத்தினால் நல்லது என்று அரசாங்கத்திற்கு தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக இந்த பஞ்சாயத்து நிர்வாகம் திறம்பட நடந்து பஞ்சாயத்து ராஜியம் வெற்றிகாமாக அமைந்துவிட்டால் நமது ஜனநாயக அமைப்பு ஸ்திரமாகிவிடும் இந்த நாட்டில் புதிதாக அமைக்கப்பட்ட பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களில் புதிய சட்டத்தின்படி நிர்வாகம் நடைபெறுவதால் அவ்வப்போது பல கஷ்டங்கள் வருகின்றன. அவற்றை தீர்த்து வைப்பதற்கு அந்த இலாகாவை மேல் பார்த்து வரும் நமது முதலமைச்சர் திரு. காமராசர் அவர்களும், பிரதம காரியதரிசி திரு. ஆர். எ. கோபால சாமி அவர்களும் அவருக்கு இணை காரியதரிசியாக இருந்து வரும் திரு கோ. வெங்கடசலபதி அவர்களும் உடனுக்குடன் கவனம் செலுத்தி வருகிறார்கள் என்பது ஒரு ஆறுதல் தரும் விஷயம். புதிய புதிய பிரச்னைகள் கிராமங்களில் எழுப்பப்படுகின்றன. 3-30 p.m.

[Sri K. Rajaram] [24th April 1962

அவைகள் உடனுக்குடன் தீர்த்து வைக்கப்படாவிட்டால் அதனுல் ஏற்படும் கஷ்டங்கள் பஞ்சாயத்துக்களே நிர்வகிக்கும் கௌரவ மானவர்களுக்கு பலவிதமான மனக்குழப்பத்தையும் அதைரியத் தையும் உண்டாக்கிவிடுகிறது. ஆகையினுல் நான் ஒரு யோசனே சொல்லுகிறேன். அரசாங்கம் இந்த பஞ்சாயத்து யூனியன்கள் பஞ்சாயத்துக்கள் இவைகளேப்பற்றி ஆலோசித்து அந்தக் கஷ்டங்களேத் தீர்த்து, அவசியமானுல் விதிகள், சட்டத்தைக்கூட மாற்ற, திருத்த அவ்வப்போது யோசனே சொல்லக் கூடிய அளவுக்கு நிரந்தரமான ஒரு ஆலோசனேக்குழுவை உடனடியாக ஏற்படுத்த வேண்டியது அவசியம் என்று எண்ணுகிறேன். அதே மாதிரி, நகர பஞ்சாயத்துக்கள் சுமார் 300 தான் இருக்கின்றன. இந்த 300 நகர பஞ்சாயத்துத் தலேவர்களின் கஷ்டங்களேப் போக்க வேண்டும். போன அக்டோபர் முதல் வாரத்தில் மாநிலத்திலுள்ள 12,500 பஞ்சாயத்துத் தலேவர்களேயும் கொண்டு பெரிய மாநாடு நடத்தி முடித்தோம். அந்தமாதிரி பெரிதாக இல்லாமல் இந்த 300 நகர பஞ்சாயத்து தலேவர்களேயும் அழைத்து . . .

**SRI A. K. THANGAVEL MUDALIAR :** நகர பஞ்சாயத்து என்ருல், மேஜர் பஞ்சாயத்து தானே ?

* **SRI K. RAJARAM :** இந்த புதுச் சட்டத்தில் அதுதான் பெயர். மேஜர் பஞ்சாயத்து என்று இல்லே. முதல் தர பஞ்சா யத்து என்று இருந்ததும் அதற்கு முன்னுல் மெஜர் பஞ்சாயத்து என்று இருந்தும் 1958 சட்டப்படி நகர பஞ்சாயத்து என்று பெயர்.

**SRI A. K. THANGAVEL MUDALIAR :** நகரம் என்ருல் முனிசி பாலிடி என்று வைத்துக் கொண்டேன்.

**SRI K. RAJARAM :** நகர பஞ்சாயத்துக்களின் கஷ்டங்களேப் போக்க வேண்டுமென்ருல் அந்த நகர பஞ்சாயத்து தலேவர்களின் ஒரு சிறு மாநாட்டைக் கூட்டி அவைகளேத் தீர்த்து வைக்க வேண்டி யது மிகவும் அவசியம். ஏற்கெனவே இதை முதலமைச்சரின் கவனத்துக்கும் பிரதம காரியதரிசியின் கவனத்துக்கும் கொண்டு வந்திருக்கிறது. அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் விரைவில் செய் வார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக குடிதண்ணீர் பிரச்னே. சென்னே நகரம், மதுரை, கோவை, திருச்சி இந்த மாநிலத்திலேயே மிகப்பெரிய நாங்கு நகரங்கள். அங்கே எல்லாம் மக்கள் குடி தண்ணீருக்காக மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிருர்கள். எத்தனேதான் மற்ற துறைகளில் முன்னேறினுலும் இந்தப் பிரச்னேயைத் தீர்க்கா விடில் நல்லதல்ல. இதை உடனடிப் பிரச்னேயாக அரசாங்கம் ஏற்றுக்கொண்டு சென்னே, மதுரை, கோவை, திருச்சி இந்த நான்கு நகரங்களின் குடிதண்ணீர் பிரச்னேயை உடனடியாக தீர்த்து வைப்பதற்கான முயற்சியை எடுத்துக் கொள்ள வேண்டு மென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

24th April 1962] [Sri K. Rajaram]

அடுத்தபடியாக மேல் பெரியாறு திட்டம். இதில் கேரள சட்ட சபையில் கேட்கப்படும் கேள்விகளுக்கு அந்த மந்திரிகள் பதில் சொல்லுவது நமக்கு மிகவும் கவலையைத் தரும் விஷயமாக இருந்து வருகிறது. தேசத்திலே மிக அதிகச் செல்வாக்கு உள்ள தலைவர்களுள் ஒருவரான நமது முதலமைச்சர் இதில் அதிகமாக சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். கேரள முதலமைச்சருடனும் கேரள சர்க்காருடனும் பேச்சு வார்த்தை நடத்தி, அவசியமானுல் மத்திய அரசாங்கத்தையும் தலையிடச் செய்து மேல் பெரியாறு திட்டத்தை அமுல்படுத்துவதற்கான ஏற்பாட்டைச் செய்ய வேண்டும். வீணுக அரபிக்கடலில் போய் விழும் தண்ணீரை சென்னை மாநிலத்திற்கு மேலும் கொஞ்சம் திருப்பி விட வேண்டும் என்பதுதான் அந்தத் திட்டம். அது சம்பந்தமான **investigation** முடிந்து விட்டது என்றுகூட சொல்லலாம். அந்தத் தண்ணீர் கிடைத்து விட்டால் மதுரை, இராமநாதபுரம் ஜில்லாக்களிலே உள்ள மிகவும் பிற்போக்கான பகுதி மக்கள் முக்குலத்தோர் என்று சொல்லப்பட்ட கள்ளர், மறவர், அகம்படியர்—எல்லாத் துறையிலேயும் பிற்பட்டவர்கள்—அவர்களை முன்னேற்ற நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றலாம். கேரளத்துக்கு வேண்டுமானுல் விளையும் நெல்லில் ஒரு பகுதியைக் கொடுக்கலாம். அதனுல் உற்பத்தியாகும் மின்சாரத்தில் ஒரு பகுதியை வேண்டுமானுலும் கொடுத்து விடலாம். ஏதாவது ஒப்பந்தம் செய்து காலம் தழுத்தாது முயற்சி செய்ய வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன். அதே மாதிரி இப்போது வைகை நீர் தேக்கத்தில் இருந்து திருமங்கலம், சிவகங்கை தாலுகாக்களுக்கு நீர்பாசனத்துக்காக தண்ணீர் விடப்படுகிறது. அந்த வாய்க்கால்களை சிமெண்ட் கான்கிரிட் செய்து தண்ணீர் அதிகமாக சேதம் இல்லாமல் செய்தால் இன்னும் ஒரு 5 அல்லது 10 ஆயிரம் ஏக்கருக்கு விடமுடியும். இன்றைய விவசாய அமைச்சராக இருக்கும் கனம் கக்கன் அவர்கள் ஏற்கெனவே இந்த யோசனையைச் சொல்லியிருக்கிருர்கள். அரசாங்க பைல்களிலேயும் இருக்கும் என்று நம்புகிறேன். இதைச் செய்தால் மேலும் 10 ஆயிரம் ஏக்கருக்கு தண்ணீர் அதிகமாகக் கொடுக்க முடியும். அதை திருமங்கலம் தாலுகாவில் **C. T. Act-** இனுல் கஷ்டப்பட்ட கள்ளர் வகுப்பைச் சேர்ந்தவர்கள் வசிக்கும் பன்னிக்குண்டு, திருமங்கலம் பிர்க்காகளில் விஸ்தரிக்கலாம் என்று சொல்லிக்கொள்ளுகிறேன்.

இப்போது சிறிய நீர்ப்பாசன திட்டங்கள், குளம் மராமத்துகளில் அதிகக் கவனம் செலுத்தப்படுகிறது. குளங்கள் மராமத்து செய்வதால் ஒரு கவனக் குறைவு பொதுவாக இருக்கிறது என்பதை வருத்தத்தோடு சொல்லிக்கொள்றேன். குளங்களுக்கு தண்ணீர் வரும் வாய்கால்களை தெற்கு ஜில்லாக்களில் காலாங்கரை என்று சொல்கிறோம். ஆங்கிலத்தில் **supply channel** என்று சொல்லுகிருர்கள். அவைகளை அரசாங்கத்திலுள்ள அது சம்பந்தமான எஞ்சினீரிங் இலாகா உத்தியோகஸ்தர்கள் கவனிப்பதே இல்லை. குடிமராமத்து செய்து கொள்ளட்டும் என்று விட்டு விடுகிருர்கள். குடிகள் ஒற்றுமையாகச் சேர்ந்து அதைச் செய்யாத

தால் குளங்களுக்கும் கண்மாய்க்கும் வர வேண்டிய தண்ணீர் பூர்த்தியாக வருவது இல்லே. நல்ல மழை செய்து வந்தாலும் ஒன்று இரண்டு மாதங்களுக்குத்தான் தேங்கி நிற்கிறது. பின்னுல் தண்ணீர் பற்றுக்குறை ஏற்படுகிறது. அதனுல் கிஸ்தி வஜா செய்ய வேண்டியிருக்கிறது. அதில் தக்க கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக நெய்வேலியில் நடக்கும் வேலேயைப் பற்றியும் கவர்னர் அவர்கள் அழகாகக் கூறி இருக்கிருர்கள். நம் கனவு பலித்துக் கொண்டு வருகிறது என்று சொல்ல வேண்டும். நெய்வேலி பழுப்பு நிலக்கரியும் சேலம் இரும்புக்கனியும் ஒன்று சேரும் பக்ஷத்தில் தமிழ் நாட்டின் வேலேயில்லாத் திண்டாட்டம் ஒழிக்கப்படுவதோடு, பம்பாய் போன்ற தொழிலிலே முன்னுக்கு வந்திருக்கும் மாநிலங்களுடன் நாமும் சரிநிகர் சமானமாக சொல்லிக்கொள்ள முடியும். அத்துடன் நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி மூலம் அதிகமான மின்சார சக்தி உற்பத்தி செய்யப் படப் போகிறது. இம்மாதமே ஒரு பகுதி அதன் மூலம் கிடைக்கும் என்று கவர்னர் அவர்கள் சொல்லியிருப்பது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயம். ஒரு யோசனே அந்த விஷயத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பெரும்பாலான கிராமங்களில் இப்போது மின்சார சக்தி கிடைக்கிறது. மின்சார சக்தியை நீர்ப்பாசனத்துக்காகக் கிணறுகளிலிருந்து தண்ணீர் இறைக்க மட்டும் கிராமஜனங்கள் நன்ருக பயன்படுத்திக் கொண்டு இருக்கிருர்கள் என்பதில் சந்தேகமில்லே. ஆனுல் அது போதாது. நமது கிராமங்கள் விவசாயத்தை மட்டும் நம்பி வாழ்ந்து வரும் வரையில் அவர்களுடைய செலவுக்கும் வரவுக்கும் சரிகட்டி போக முடியாது. தற்போதிருக்கும் பஞ்சாயத்து சட்டத்திலேயே இடம் இருக்கிறது. ஒவ்வொரு பஞ்சாயத்திலேயும் ஒரு சிறு தொழிற் சாலேயை மின்சார சக்தியைக் கொண்டு ஏற்படுத்த வேண்டும். என்ன மூலப்பொருள் கிடைக்கிறதோ அதைக் கொண்டு ஒரு தொழிற்சாலே ; அதைப்போல பஞ்சாயத்து யூனியன் பிரதேசத்தில் ஒரு தொழில் பேட்டை. தொழிலமைச்சர் அவர்கள் வெகுநாளாக அதை சொல்லிக்கொண்டுதான் வருகிருர்கள். அப்படி தொழில் பேட்டை ஒன்றை அமைத்து பஞ்சாயத்து யூனியன் மேற் பார்வையில் நடத்த வேண்டும். பஞ்சாயத்துகளே சிறு சிறு தொழில்கள் நடத்த வேண்டும். வேலே இல்லாதவர் களுக்கு வேலே கொடுக்க வேண்டும். இதனுல் வருஷத்தில் பல நாட்கள் வேலே இல்லாமல் சோம்பேறிகளாகி வரும் விவசாயி களுக்கு வேலே கொடுக்க முடியும்.

3-40 p.m. பஞ்சாயத்துக்களுக்கு மேலும் சில பொறுப்புக்களே கொடுக் கலாம். கிராமங்களுக்கு வேண்டிய விதைகள் எல்லாம் அந்தந்த பஞ்சாயத்துக்களின் மேற்பார்வையில் உற்பத்தி செய்து கிராமங் களுக்கு சப்ளே செய்வதற்கும் ஏற்பாடு செய்யவேண்டும்.

அடுத்தபடியாக தூத்துக்குடி ஆழ்கடல் துறைமுகத் திட்டம் நமது மாகாண முன்னுள் அமைச்சர் டாக்டர் சுப்பராயன் அவர்கள்—இன்று பம்பாய் மாநிலத்தின் கவர்னராக இருப்ப

24th April 1962] [Sri K. Rajaram]

வரால் நமக்கு ஏற்பட்டது. அவர் மத்திய அரசாங்கத்தின் அமைச்சராக இருந்தபோது நம் மாநிலத்திற்கு செய்த ஒரு பெரிய சேவை இந்த தூத்துக்குடி ஆழ்கடல் துறைமுகத்திட்டம் சேங்ஷன் செய்தது என்று சொன்னால் அதைக்கண்டு நாம் பெருமைப்படுகிறோம். அதற்கு நாம் அவரை பாராட்ட கடமைப்பட்டிருக்கிறோம். முழு முயற்சியும் நமது முதல் அமைச்சர் திரு. காமராஜ் அவர்களுடையது என்று சொன்னால் அதுவும் மிகையாகாது. ஏனென்றால் ஒரு சமயம் அந்தத் திட்டத்தைக் கைவிடவேண்டுமென்ற நிலைமையில் வந்துவிட்டது. நமது முதலமைச்சரின் சலியாத முயற்சியினால்தான் அந்தத் தூத்துக்குடி துறைமுகத் திட்டம் நிறைவேறியது என்று சொன்னால் அதில் சந்தேகம் இல்லை. இந்தத் தூத்துக்குடி ஆழ்கடல் துறைமுகத்திட்டம் என்பதோடு நின்றுவிடாமல் சேதுசமுத்திரத் திட்டமும் நமக்கு வரும் வகையில் செயலாற்ற வேண்டும். இந்த விஷயத்திலே சேதுசமுத்திரத் திட்டத்திலே நம்முடைய மாகாண சர்க்கார் மத்திய சர்க்காருக்கு எடுத்துச் சொல்லி அதனுடைய முக்கியத்துவத்தை வற்புறுத்தி ஆவன செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். அத்துடன் இல்லாமல் தூத்துக்குடி ஆழ் கடல் துறைமுகத் திட்டத்தினை நிறைவேற்றுவதற்குள்ளாகவே தூத்துக்குடியிலிருந்து திருச்சி வரையில் மீட்டர் கேஜ் ரயில் பாதையாக இருப்பதை ப்ராட் கேஜ் பாதையாக மாற்றிவிட வேண்டும். இல்லையென்றால் போக்குவரத்துத் தொல்லைகள் வந்து சேரும். ஆரம்பத்தில் இதைப் பற்றி சொல்லியிருக்கிறோம்.

அடுத்தபடியாக விலைவாசி உயர்வைப் பற்றி அரசாங்கம் அதிகமாக சிந்தித்துக்கொண்டு இருக்கிறது என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் இதற்காக பழையமாதிரி கண்ட்ரோல் கொண்டு வருவது மிகப் பெரிய ஆபத்தாகும். கண்ட்ரோலைக் கொண்டுவந்து விடாமல் இருக்கவேண்டும். இடையிலே தரகர்களாக இருந்து கொள்ளை லாபம் அடித்துக்கொண்டிருப்பதைத் தடுக்கவேண்டும். விவசாயிகளுக்கு நியாயமான விலை கிடைக்க வழி செய்ய வேண்டும். வாங்கக் கூடியவர்களுக்கும் நியாயம் வழங்க வேண்டும். அதற்கு தகுந்தபடி அரசாங்கம் திட்டம் வகுக்க வேண்டும். இதைச் சொல்லிவிட்டுப் போய்விடலாம். அதைச் செய்வதில்தான் சிரமம் அதிகமாக இருக்கிறது. எல்லா இடங்களுக்கும் இல்லையென்றாலும் கூட முனிசிபல் நகரங்கள், நகர பஞ்சாயத்துப் பிரதேசங்கள், தொழிற்சாலைப் பிரதேசங்கள் இந்த இடங்களிலாவது கூட்டுறவு சொசைட்டிகள் மூலம் அடக்க விலைக்கே விற்கும் நிலையை உண்டாக்கவேண்டும். சம்பளம் பெறும் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் மட்டுமல்லாமல் தொழிலாளர்கள், சிப்பந்திகள் இம்மாதிரி நகரப் பிரதேசங்களில், தொழிற்சாலை பிரதேசங்களில் இருப்பவர்களுக்கு வசதி செய்து கொடுத்தால் நல்லது. அடக்கவிலைக்கே வாங்கி விற்பதனால் ஏற்படும் நஷ்டம், போக்குவரத்துச் செலவுகள், கமிஷன் எல்லாவற்றையும் அரசாங்கம் ஏற்றுக்கொண்டு விலைவாசிகள் அதிகமாகிவிடாமல் நியாயமான விலையில் குறைந்த விலையில் மேற்கண்டவர்களுக்கு கிடைக்கும்படி செய்தால் அதிக சிரமமில்லாது அவர்கள்

வாழ்க்கை நடத்த முடியும். அதை அரசாங்கம் யோசிக்கவேண்டு மென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். (சப்சிடி கொடுக்க லாம்—ஸ்ரீமதி மஞ்சுபாஷினி) அவசியமானால் அம்மையார் அவர்கள் சொல்கிறமாதிரி சப்சிடி கொடுக்கவேண்டுமென்றால் செய்ய வேண்டியதுதான். பொதுவாக இப்போது நாம் திட்டகாலத்தில் இருக்கிறோம். இந்த நேரத்தில் விலைவாசி உயர்வைக் கட்டு படுத்துவது சிரமமான காரியம் என்பதை பெரிய நிபுணர்கள்கூட கூறியிருக்கிறார்கள். யாரும் இதைப்பற்றி ஏன் விலை ஏறுகிறது? அரசாங்கம்தான் இதற்கு காரணம் என்று சொல்வார்களானால் அது விஷயம் தெரியாதவர்கள் கூறுவதாகத்தான் கொள்ள முடியும். திட்டம் அமைத்து அதற்காக ஆயிரம் கோடி, ஐயாயிரம் கோடி என்று செலவழித்துக் கொண்டிருக்கும்போது விலைவாசிகள் அதிகமாகத்தான் செய்யும். அதற்குத் தகுந்தபடி உற்பத்தி பெருகவேண்டும். இப்போது உற்பத்தி பெருகியிருந் தாலும்கூட இன்னும் அதிகமாக வேண்டும். அது அதிகமாகவில்லை என்றால் விலைவாசிகள் தானாகவே உயரத்தான் செய்யும். அதை இந்த இடைக்காலத்தில் எப்படி சமாளிக்கவேண்டுமென்று யோசித்து அதைச் சமாளிக்க வேண்டும். பொதுவாக திட்டத்தை நிறைவேற்றுவதில் இப்போது புதிதாக அமைத்திருக்கும் அமைச் சரவையைப் பற்றியும் கவர்னர் பெருமான் அவர்கள் சில வார்த்தைகள் சொன்னது மிகவும் பொருத்தமானது. நிர்வாகத் திறமையும் இளமைத் துடிப்பும் மிகுந்த அமைச்சர்கள் இருக் கிறார்கள். இந்த இரண்டு அம்சங்களும் நமது அமைச்சரவையில் சேர்ந்து இடம் பெற்றிருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதற்கு முன் இருந்த அமைச்சர் அவை எவ்வளவு சிரத்தையுடன் பொதுஜன தொடர்பு கொண்டு வெற்றிகரமாக காரியங்களை நிறைவேற்றி வந்ததோ அதில் ஒரு சிறிதும் குறையாத அளவில் புது அமைச்சர்களும் பணியாற்றுவார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. நமது லட்சியமாகிய சமதர்ம சமுதாயத்தை அமைப் பதில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றி வருகிறோம் என்பதை அறிவோம். ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றுவது என்பது ஆக்க வேலைகளைச் செய்வது என்பது தான் அர்த்தம். இதில் அபிப்பிராய பேதத்திற்கு இடமேயில்லை. எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும். அரசியல் கட்சிகள் எல்லாம் ஒத்துழைக்க வேண்டும். ஆகையால் எல்லோருடைய ஒத் துழைப்பைக் கொண்டு அமைச்சர்கள் திட்டங்களை நல்லமுறையில் நிறைவேற்றி வெற்றிகாண்பார்கள். அரசாங்கம் வெற்றியடையும் என்று எனது நம்பிக்கையைத் தெரிவித்துக்கொண்டு அதற்கு இந்த சபை தன் பரிபூரண ஒத்துழைப்பை நல்கும் என்று கூறிக் கொண்டு எனது வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

**Sri C. MUTHIAH :** கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, திரு. கே. ராஜாராம் அவர்கள் கொண்டுவந்த தீர்மானத்தை ஆதரித்து, மேன்மை தங்கிய கவர்னர் பெருமான் ஆற்றிய உரை யானது இங்கு இருக்கிற சட்டமன்ற அங்கத்தினர்களையும் பொது வாக மக்களையும் நம்பிக்கைக்குப் பாத்திரமாக ஓரளவு ஆக்கியிருக் கிறது என்பதை முதலிலே நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன். காரணம், அரசாங்கத்திற்கு உள்ள வருவாய், வசதிக்கு ஏற்ப

24th April 1962] [Sri C. Muthiah]

நடக்கிற திட்டம், நடக்கப்போகிற திட்டம் இவைகளில் மாநில அரசாங்கம், இந்திய அரசாங்கம் இவை என்ன செய்யப் போகின்றன என்ன செய்தன என்பதையெல்லாம் இந்த ஆண்டு கவர்னர் அவர்கள் உரையில் கூறியிருப்பது மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. அவர்கள், கடந்த தேர்தல் மிக நல்ல முறையில் நடந்திருப்பதைப்பற்றி மிக அழகாக குறிப்பிட்டிருக்கிறார்கள். 1957-ம் ஆண்டு தேர்தலையும் 1962-ம் ஆண்டு தேர்தலையும் ஒப்பிட்டுப் பார்த்தால் மக்களிடையே எவ்வளவு மாபெரும் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பது தெரியவரும். முதலிலே ஒவ்வொரு பெட்டிக்கும் அந்தந்த சின்னத்தை ஒட்டி 1957-ம் வருடத் தேர்தல் நடைபெற்றது. 1962-ல் நடந்த தேர்தலில் ஒரே தாளிலே பல சின்னங்களை வைத்து ஒரே பெட்டியிலே வாக்களிக்கும் நிலை ஏற்பட்டது. இதைப்பார்க்கும்போது வாக்காளர்கள் எந்த அளவுக்கு மாறிவருகிறார்கள் என்பது தெரியும். இப்போது வாக்காளர்கள் எதையும் சிந்தித்துதான் வாக்களிக்கிறார்கள் என்பதோடு கூட 100க்கு 75 சதவிகிதம் வாக்களித்திருக்கிறார்கள் என்பது பெருமைப்படக்கூடிய விஷயமாகும். அரசாங்கத்தில் ஆட்சியாளர்களை எப்படி அனுப்புவது என்பதை மக்கள் நன்கு அறிந்திருக்கிறார்கள் என்பதை நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். இன்றைய தினம் கிராம மக்கள் பஞ்சாயத்துக்களில் இருக்கிற மக்கள் இந்தத் தேர்தலில் எந்தவிதமான கஷ்டத்தை அனுபவிக்கிறார்கள் என்பதை இங்கு அமைச்சர் அவர்களுக்கு சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன். ஒரு மணி நேரத்திற்கு 80 வாக்காளர்கள் வாக்கு போடும்படியான நிலைமையில் இருக்கிறது. 80 வாக்காளர்கள் தங்களின் இரண்டு வாக்குகளையும் ஒரு மணி நேரத்தில் போடமுடியுமா என்பதை கண்காணித்து பார்த்து அந்தக் கஷ்டத்தை நீக்கவேண்டும். அப்போதுதான் மக்கள் வெயிலிலே நின்று வேதனைப்படாமல் காலையிலும் மாலையிலும் வந்து வாக்களிக்கும் நிலைமை ஏற்படும். அவர்களுக்கு இருக்கும் இந்தக் கஷ்டத்திலிருந்து அவர்களைக் காப்பாற்ற வேண்டுமென்று சொல்ல விரும்புகிறேன். ஸ்தல ஸ்தாபன தேர்தல் சம்பந்தப்பட்ட வரையில் என்னைப் பொருத்தமட்டில் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறேன். காரணம், ஒரு பஞ்சாயத்துத் தலைவன், மேல்சபையில் அங்கம் வகிக்கும் வாய்ப்பை இந்த அரசாங்கம் ஏற்படுத்திக் கொடுத்ததற்காக பெருமைப்படுகிறேன். பஞ்சாயத்து யூனியனில் அங்கத்தினராக இருக்கிறவர்கள் எல்லாம் இங்கு மேல்சபை அங்கத்தினராவதற்கு வாக்கு கொடுக்க வேண்டுமென்ற நிலைமையில் இரண்டு ஜில்லாவுக்கு ஒரு அங்கத்தினர் எடுக்கவேண்டுமென்ற நிலைமை இன்றைய தினம் இருக்கிறது.

காரணம் என்னவென்று கேட்டால் நான் ஒரு பஞ்சாயத்து 3-50 p.m.
யூனியனைத் தலைமை தாங்கி நடத்துகிற காரணத்தால் மாநிலத்தில் 375 அமைச்சர்கள் இருக்கிறார்கள் என்ற கருத்திலே இருக்கிறேன். இங்கே இருக்கிற அமைச்சர்கள் எல்லாம் ஒவ்வொரு **Portfolio**-வை அவரவர்கள் பார்க்கிறார்கள். எங்களிடம் எட்டு **Portfolio**-வையும் வைத்துக் கொண்டு நாங்களே இஷ்டம் போல் செய்யும் சூழ்நிலையை பஞ்சாயத்து ராஜ்ய சட்டத்தை இயற்றியதன் மூலம் கிராமப்புறத்தில் ஏற்படுத்தி இருக்கிறார்கள். பஞ்சாயத்து சட்ட

[Sri C. Muthiah] [24th April 1962

**Preamble**-ல் குறிப்பிட்டதுபோல விவசாயம், கைத்தொழில் இவைகளில் நேரடியாகத் தொடர்புகொண்டு ஸ்தலஸ்தாபனம் தான் பணிபுரிந்து வருகிறது என்றால், அது இன்றைய தினம் ஆட்சி யாளர் போட்ட சட்டத்திலே இருக்கிற காரணத்தால்தான் என்ற மறுக்க முடியாத உண்மையைச் சொல்லிக் கொள்கிறேன். இங்கே செய்கிற காரியங்கள் எல்லாம் இந்திய அரசாங்கத்தி லிருந்து போடப்பட்ட மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தை நிறை வேற்றுவதாக இருக்கிறதே தவிர இங்கே இருக்கிற திட்டத்திலே ஒன்றும் செய்ய முடியாத நிலை இருக்கிறது. அப்படி இருக்கிற காரணத்தால் நமது பஞ்சாயத்து யூனியன் நிர்வாகத்திலே என்ன என்ன தேவையோ, விவசாயத்துக்கு எது தேவையோ, அந்தந்தக் காலத்தில் அரசாங்கம் கண்ணும் கருத்துமாக இருந்து நல்ல முறை யில் மக்களுக்கு நேரடியாக நேரிடைத் தொடர்பு கொண்டு ஒரு ஆண்டுக் காலமாகச் செய்து வருவதைப் பார்த்து, ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனும் ஒரு ஆண்டு **anniversary**-ஐ நடத்த அவர்கள் முதல் ஆண்டு அறிக்கையை வைத்திருப்பதைப் பார்த் தால், மாநிலத்தை மொத்தமாக எடுத்துக் கொண்டு பார்த்தால், பஞ்சாயத்து ராஜ்ய அமைப்பில் எந்த அளவுக்கு வேலை நடந்து இருக்கிறது என்பதைப் பெருமையாகக் கூற முடியும் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்து இன்றைய தினம் இங்கே இருக்கிற அமைச்சரவையிலே சென்ற பத்து ஆண்டுக் காலமாக இருந்த அமைச்சரவையிலே நாம் பார்த்துக் கொண்டிருந்த அமைச்சர்களையே பார்ப்பதில் நான் மிகமிக சந்தோஷப்படுகிறேன். காரணம் அனுபவம் பெற்ற வர்கள் சாதித்த சாதனைகளின் பெருமை அங்கே இருக்கிறது. நான் பாராட்டுகிறேன் என்றால் என்னுடைய வாக்காளர்களும் பஞ்சாயத்து தலைவர்களும் பாராட்டுவதாக நினைத்துக் கொள்ள லாம். அமைச்சர் செய்த காரியங்களால் அவர் உழைப்பின் பெருமையால் மீண்டும் அமைச்சரவையில் இடம் பெற்று, கவர்னர் பெருமான் அவர்கள் குறிப்பிட்டது போல, துரிதமாகவும் துணிச்சலாகவும் பணியாற்றக் கூடியவர்கள் என்பதை நான் ஞாபகப் படுத்துகிறேன். காரியங்களை துணிச்சலோடும் துரித மாகவும் நடத்தும்படி நான் தாழ்மையாகக் கேட்டுக் கொள்ளு கிறேன். மக்கள் மின்சார வேகத்தில் பறக்கிறார்கள். எல்லாம் மின்சார வேகத்தில் நடக்க வேண்டும் என்று கருதுகிற காரணத்தால் இங்கே அமைச்சரவையில் என்னைப் போன்ற வர்களுக்கும் சந்தர்ப்பம் இருக்கிறது. பெரியவர்களைப் பார்த்து மரியாதையாகப் பேசிவிட்டுப் போகும் நேரம் இருந்தது. பால்யமாக இருக்கிறவர்களைப் பார்த்தால் அதட்டிக் கேட்கும் சூழ்நிலையில் இளைஞர்கள் இருப்பதைப்பார்த்தும் பாராட்டுகிறேன். அப்படிப்பட்டவர்கள் வரும்போது எங்களுக்கும் புது ரத்தம் உள்ளத்திலே பாய்கிறது என்பதைத் தெளிவாகச் சொல்ல வேண்டி இருக்கிறது. அவர்களை முதலிலே எங்கள் சார்பில் கவனித்து, எங்களை பெரியவர்கள் என்ன நிலையில் வைத்திருந்தார்களோ, அதேபோல் பெரியவர்களை அந்த நிலையில் வையுங்கள் என்று கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

24th April 1962]         [Sri C. Muthiah]

அடுத்ததாக, தஞ்சை தீவிர சாகுபடி திட்டத்தைப் பற்றிச் சொல்லி இருக்கிறார்கள். அதை விஸ்தரிப்பதாகச் சொல்லி இருக்கிறார்கள். உணவு உற்பத்தி இங்கே குறிப்பிட்டதைப் போல 9 லட்சம் டன் அதிகமாகி இருக்கிறது. கிராமப்புள்ளி விவரப்படி ஒரு மாவுக்கு இரண்டு மூட்டை அதிகமாக்கி இருக்கிற பெருமை பஞ்சாயத்துகளுக்குத்தான் சாரும் என்று கூற விரும்பு கிறேன். தீவிர சாகுபடி திட்டப்படி 100-க்கு 75 விதம் தான் தஞ்சையில் 5 ஆண்டு காலத்தில் தீவிர சாகுபடி திட்டத்துக்கு வருகிறது. பாக்கி நிலம் வரமுடியாமல் இருக்கிறது. காரணம் முதலில் 15, 10, பிறகு 25 என்று 4 ஆண்டு காலத்தில் 75 சத விதம் நிலத்தைக் கொண்டுவந்து அதற்குள்ள திட்டத்தையும் கொடுத்து இருக்கிறார்கள். அதற்குத் தேவையான கருவிகளையும் அவசரமாக வழங்க வேண்டும். ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனுக்கும் ஒரு டிராக்டர் கொடுத்து இருக்கவேண்டும். ஒரு ஜீப்பைக் கொடுத்து ஜீப்பில் போகும் வசதியைச் செய்திருக்கிறார்களே தவிர **dusters, sprayers** போன்றவைகள் கொடுக்கவில்லை. அதைப்பற்றி எவ்வளவு எழுதினாலும், மாகாண ரீதியாக கவனிக்கப்படுகிறது. இதையும் துணிச்சலோடு சீக்கிரமாகச் செய்யவேண்டும் என்று தாழ்மையாகக் கேட்டுக்கொள்கிறேன். காரணம் என்ன வென்றால், நிச்சயமாக இந்த ஆண்டு கிடைக்கும் என்று சொல்லி இருக்கிறபடியால், இன்னும் 9 லட்சம் டன்னை 16 லட்சமாகச் செய்ய, உபகரணங்களைக் கொடுத்தால் நல்ல முறையில் விவசாய அபிவிருத்தியைக் காட்ட முடியும் என்ற நம்பிக்கையோடு சொல்லிக்கொள்ளுகிறேன். மேலும் பஞ்சாயத்து யூனியனில் சென்ற ஆண்டு குடிமராமத்து வேலை மாகாணம் பூராகவும் திரு. ஆர். எ. கோபாலசாமி அவர்கள் முயற்சியால் நடந்தது. தஞ்சை ஜில்லா சம்பந்தப்பட்ட வரையில் தீவிர சாகுபடித் திட்டம் இருக்கிற இடங்களில் எ, பி, சி கிளாஸ் பாகுபாடு இல்லாமல் எல்லா வாய்க்காலையும் வெட்டி நல்ல முறையில் சாகுபடிக்கு உதவியான சூழ்நிலை இருந்தது. அதைத்தொடர்ந்து இந்த ஆண்டும் அதைச்செய்யும்படி செய்து, ரசாயன எருக்கள் நேரத்தில் கிடைக்கும்படி செய்து, கூட்டுறவு ஸ்தாபனத்தில் கிடைக்கும் பங்குத்தொகை ஸ்டேட் பாங்கு, ரிசர்வ் பாங்கு இவைகளிலிருந்து தாமதமாக வராமல் சீக்கிரத்தில் கிடைக்கும் படி செய்து தண்ணீர் வரும் முன்பே விதையும் ரசாயன எருவும், கலப்பை, டிராக்டர்களும் தயாராக இருக்கும் என்ற பெருமை யான சூழ்நிலை வந்தால் தான் தீவிரமாக சாகுபடியில் குறிப்பிட்ட எல்லையை அடைய வாய்ப்பாக இருக்கும் என்று சொல்ல விரும்பு கிறேன். நிச்சயமாக எங்கள் ஜில்லா சம்பந்தப்பட்டவரை முப் போக நிலங்கள் இருக்கின்றன. வருஷத்தில் 11 மாதமும் சாகு படியில் இருக்கக்கூடிய நிலங்கள் குறிப்பாக சீர்காழி தாலுகாவில் இருக்கிறது. அதனால் பாசன வசதியை கடைசி வரையில் கிடைக்கும் சூழ்நிலையை தாமதம் இல்லாமல் ஏற்படுத்த வேண்டும். அதை அமுலில் நடத்துவதில் உள்ள சிக்கல்களை ஆராய்ந்து பார்த்து, அதிகமாக ஏன் விளையவில்லை என்ற காரணத்தைக் கண்டு பிடிக்கலாம். சங்கடங்களைத் தவிர்க்க தகுந்த அதிகாரிகளைப் போடவேண்டும். கூட்டுறவு ஸ்தாபனத் தால் தீவிரசாகுபடி முறைக்கு சில சங்கடங்கள் இருக்கின்றன.

[Sri C. Muthiah] [24th April 1962

இரண்டு டிபார்ட்மெண்டுகளுக்கும் **co-ordination** தேவையாக இருக்கிறது. விவசாய கூட்டுறவு இலாகாக்களின் அதிகாரிகளிடையே சிலசமயம் யார் பெரியவர்கள் என்ற நிலை ஏற்படுவதின் காரணமாக ஒருவருக்கொருவர் முரண்பாடு ஏற்பட்டு கிராம விவசாயிகளுக்கு காலத்தில் தேவையானவைகள் கிடைக்க வாய்ப்பு இல்லாமல் போகிறது. தீவிர சாகுபடி திட்டத்தின்கீழ் அதிகமாக விஸ்தீரணத்தைக் கொண்டுவந்து, 3வது போகத்தில் அதிகமாக உற்பத்தி செய்யவும், கோடை காலத்தில் பருத்தி முதலிய தானியங்களைப் போடவும், கவர்னர் பெருமான் உரையில் சொல்லி இருப்பது போல் அமைச்சர்கள் முயற்சி எடுப்பார்கள் என்று நிச்சயம் தெரியும். இப்போது இருக்கும் அமைச்சர் அவர்கள் ஊக்கமாக இதை எல்லாம் கவனித்து வருவதாகவும் சென்ற மாதம் கூட்டம் போட்டு எல்லாம் விசாரித்ததாகவும் கேட்டு மகிழ்ச்சியடைகிறேன்.

மேலும் கவர்னர் பெருமான் அவர்கள், ஆரம்பக் கல்வியைக் கட்டாயக் கல்வி என்று சொல்லி இருக்கிறார்கள். கட்டாயக் கல்வி சம்பந்தப்பட்டவரை சென்ற ஆண்டிலேயே பஞ்சாயத்து யூனியன் எல்லாம் சரஸ்வதி பூஜை நாளுக்குள் நிறைவேற்ற வேண்டும் என்று அரசாங்க ஆக்ஞை வந்து, சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டு 75 சதவிதத்திற்கு மேல் ஆரம்பப்பள்ளிகளில் பிள்ளைகள் அதிகமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள் என்ற விவரத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன். முன்னாளில் ஜில்லா போர்டிலிருந்து இப்போது பஞ்சாயத்து யூனியனில் ஒப்படைக்கப்பட்ட பள்ளிகள் கண்ணால் கூடப் பார்க்க முடியாத நிலையில் இருந்தபடியால், அவைகளை எடுத்து நிர்வகிக்க வேண்டுமென்றால், திருத்தி அமைக்க வேண்டும். அதற்கு பிரத்யேகமான மானியம் கொடுக்கப்பட வேண்டும். ஆர்வம் காரணமாக அவைகளை எடுத்துக் கொண்டு, புதிதாகப் பிள்ளைகளைச் சேர்க்கவும் ஆசைப்படுகிறோம். போதிய இடம், ஆசிரியர்கள், பிள்ளைகள், ஆசிரியர்கள் தங்க வசதி தேவைப்படுகிறது. இதனால் பகல் உணவு, சீருடைத் திட்டங்கள் வெற்றி பெற, அடிப்படையில் இருக்கிற சிக்கலை நீக்க வேண்டும். இந்த ஆண்டு நிச்சயமாக 100-க்கு 100 பிள்ளைகளைச் சேர்ப்பதற்கான வாய்ப்பு இருக்கிறது. அதற்கு ஆசிரியர்கள் முக்கியப் பங்கு எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். எந்தத் திட்டமாக இருந்தாலும், சீருடை திட்டமானாலும் சரி, சீரமைப்பு திட்டமானாலும் சரி, கட்டாயக் கல்வி திட்டமானாலும் சரி, நாட்டிலே ஆரம்பக் கல்விக்கு பெரும் பணியாற்றுகிறவர்கள் ஆசிரியர்கள் என்பதையும் இந்த மன்றத்தில் குறிப்பிட விரும்புகிறேன்.

மேலும் இன்றையத்தினம் உயர்நிலைப்பள்ளிகளுக்கு என்ன நிலைமை என்று திட்டவட்டமாக எதுவும் வகுக்காமல் ஓராண்டு காலமாக அரசாங்கம் இருப்பது வருந்தத் தக்க விஷயம் என்று
4-00 p.m. சொல்ல விரும்புகிறேன். கலெக்டர் கையில் இருக்கிறதா? தனியார் துறையில் உள்ளவர்களிடம் இருக்கிறதா என்று புரியாமல் ஜில்லா போர்டு இருக்கும்போது இருந்த நிலைமையிலேயே இன்னும் இருந்து வருகிறது. டைரக்டர் ஆஃப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன் கண்காணிப்பா, ஜில்லா கலெக்டர் கண்காணிப்பா அதற்கு யார் அதிகாரி, அதில் ஏதாவது குறையேற்பட்டால் யார்

நிவாரணம் செய்வது என்று புரியாமல் செகண்டரி எஜுகேஷன் இருக்கிறது. அரசாங்கம் கையில் வைத்திருப்பது என்றால் இந்த அகாடமிக் வருஷம் ஆரம்பமாகுமுன் திட்ட வட்டமாக ஒரு திட்டம் வகுக்கவேண்டும் என்று சொல்லிக்கொண்டு மேன்மை தங்கிய கவர்னர் அவர்களுடைய உரை மக்களுக்கு ஒரு உற்சாகத்தைக் கொடுப்பதாக இருக்கிறது என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

MR. CHAIRMAN : I have received notice of three amendments. Will the hon. Members kindly move their amendments and get them seconded? Then hon. Members can speak both on the motion and the amendments.

SRI T. P. SRINIVASAVARADAN : Sir, I move—

"Add the following at the end :

'but regret to note that no mention has been made of the steps to be taken (*i*) to stabilise the prices of essential consumer articles; (*ii*) to ensure adequate supply of drinking water in Madras City and major urban areas; and (*iii*) for clearance of slums in all cities and in particular in Madras City'."

SRI G. KRISHNAMOORTHY : Sir, I second the amendment.

SRI S. K. SAMBANDHAN : Sir, I move—

"Add the following at the end :

'but regret to note that there is no reference in the Governor's Address to the measures to be taken (*i*) to arrest the rise in prices; (*ii*) to solve the problem of short supply of coal, cement, power, etc., and (*iii*) for the reduction of tax burden on the middle class people'."

SRI G. KRISHNAMOORTHY : Sir, I second the amendment.

SRI A. K. THANGAVEL MUDALIAR : தலைவர் அவர்களே, பிரேரணையின் இறுதியில் சேர்த்துக்கொள்ள கீழ்க்கண்ட திருத்தத்தைப் பிரேரேபிக்கிறேன்.

"ஆனால், கூட்டுறவுகள் அபிவிருத்தி பற்றியும், மேலும் விஸ்தரிப்பு பற்றியும், உணவு விலை ஏற்றத்தைப் பற்றியும், கைத்தறி நெசவாளர்களுக்கு இருக்கப்பட்ட குறைகளை—நூல் விலையேற்றத்தினால் அவர்களுக்குள்ள கஷ்டங்களை போக்குவது பற்றியும் நியாயமான பொதுநிலையான தேர்தல் நடத்தும் வழி பற்றியும் கவர்னர் உரையில் ஒன்றும் குறிப்பிடப்படவில்லை என்பது வருந்தத்தக்கது."

SRI R. VENKATACHALAM : நான் அதை வழிமொழிகிறேன்.

SRI K. BALASUBRAMANYA AYYAR : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, கவர்னர் அவர்கள் அறிக்கையைப் பற்றி இங்கு நாங்கள் சில வார்த்தைகள் சொல்ல முன்வந்திருக்கிறோம். அவர்களும் பேசினார்கள். நாங்கள் சில குறைகளைச் சொல்வதாக இருந்தால் அதைக்கொண்டு

ஒத்துழைப்பதற்கு விரோதமாக சொல்வதாக நினைக்கக் கூடாது என்று அமைச்சர்களையும் எல்லோரையும் கேட்டுக்கொள்கிறேன். ஒத்துழைப்பு வேண்டுமென்பது எல்லோருடைய அபிப்பிராயம். காரியங்களை எப்படி செய்வது என்னென்ன முறைகளில் செய்வது என்பதில் தான் அபிப்பிராய பேதம் உண்டு. அவற்றைத் தெரிவித்துக்கொள்ளவே சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அது அவசியமும்கூட. அவற்றைத் தெரிந்துகொள்ளாமல் காரியங்களை நடத்துவதும் சரியல்ல என்பதை யாரும் ஒப்புக்கொள்வார்கள் என்று நினைப்பதால் அதைப் பேச முன்வந்திருக்கிறேன். இந்த அமைச்சர் குழுவை நான் வரவேற்கிறேன். மேற்கொண்டு விட்டவுடன் வரவேற்பது அனுவசியம் என்று சிலர் நினைக்கலாம். எங்களுக்கு நான் சொல்லிக்கொள்கிறேன். அமைச்சர்கள் எல்லோரையும் நான் நன்கு அறிவேன். ஏற்கனவே அமைச்சர் குழுவில் இருந்தவர்களும் இருக்கிறார்கள். புதிதாக வந்தவர்களையும் நான் முக்கியமாக வரவேற்கிறேன். அமைச்சர் குழுவிலே ஒரு விஷயம் மாத்திரம் நான் சொல்ல ஆசைப்படுகிறேன். நாங்கள் சொல்கிற விஷயங்களை கவனிப்பதற்கு அமைச்சர் குழுவில் சிலராவது இருந்தால் நல்லது என்று கேட்டுக்கொள்கிறேன். நாங்கள் ஆரம்பித்தவுடன் சிலர் வெளியே போய்விடுகிறார்கள். அவர்களுக்கு வேறு அவசியமான காரியங்கள் இருந்துபோனால் போகலாம். அதை யாரும் தடுக்க முடியாது. அதற்காக நாங்கள் ஒன்றும் சொல்ல வில்லை. அவர்கள் போவதைப் பார்க்கும்போது நாங்கள் பேச ஆரம்பித்ததும் தான் போகிறார்களோ என்று நினைக்கவேண்டியிருக்கிறது. அந்தந்த அமைச்சர்களுடைய இலாக்காக்கள் சம்பந்தப்பட்ட விஷயங்கள் நாங்கள் பேசுகிறோம். அவைகளை அவர்கள் இருந்து கவனித்தால் எங்களுக்கு ஒரு ஆறுதல் ஏற்படும். சொல்வதை உடனே செய்யாவிட்டாலும் சொல்வதைக் கேட்கிறார்கள், நாளைக்கு அவர்கள் அதைக் கவனிப்பார்கள் என்று எங்களுக்கு எண்ணம் வரும். பல சமயங்களில் நாங்கள் இதைச் சொல்லியிருக்கிறோம். அவசியமான காரியங்கள் இருந்தால் அதைத் தடுக்க நம்மால் முடியாது. முக்கியமாக கவர்னர் அறிக்கையைப் பற்றி பேசும்போதுகூட மற்ற வரவு-செலவுத் திட்டத்தில் பேசுகிற சமயத்தில் அவர்கள் இருந்தால் மிக நன்றாக இருக்கும். அது ஒரு வழக்கமாக இருக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். சட்டபூர்வமாகவோ வற்புறுத்தியோ இதைச் சொல்ல வேண்டுமென்று எண்ணமில்லை. அடுத்தபடியாக இன்னொரு விஷயம் சொல்கிறேன். அதைப் பற்றியும் யோசிக்க வேண்டும். அது சுலபம் அல்ல. அதாவது சட்டங்கள் நம்முடைய மன்றத்திற்கு வரும்போது எல்லாவிதமான சீர்திருத்தங்களையும் ஒரே ஓட்டாக பண்ணவேண்டுமா, ஒவ்வொரு தீர்மானமாக வைத்துக்கொள்ளவேண்டுமா என்பதைப்பற்றி சிந்திக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சில சட்ட சம்பந்தமான மாறுதல்கள் இருக்கின்றன. சாதாரண மாறுதல்கள் இருக்கின்றன. இவைகளையெல்லாம் தீர்மானமாக கொண்டுவரும்போது யாரும் எப்போதும் தங்கள் வாக்குகளை கட்டுப்பாடில்லாமல் அளிக்கலாம் என்று—நிர்பந்தமில்லாமல் விடலாமென்று நினைக்

24th April 1962] [Sri K. Balasubramanya Ayyar]

கிறேன். பார்லிமென்டரி முறைக்கு ஒத்திருந்தால் கவனிக்கலாம் என்றும் அதை ஒரு வழக்கமாக வைத்துக்கொள்ள வேண்டு மென்றும் தோன்றுகிறது. மூன்ருவதாக இந்த அறிக்கையில் சொல்லப்பட்ட விஷயங்கள் எல்லாம் நாம் பார்த்து மகிழ்ச்சி அடை கிறோம் என்று சொல்லிக்கொள்வது அவசியமில்லை. அதில் சொல் லாத சில விஷயங்களும் இருக்கின்றன. முக்கியமாக ஒன்று, விலை வாசிகள் ஏறிக்கொண்டே போய்கொண்டிருக்கின்றன. அதைப் பற்றி நாங்கள் கவனிக்கிறோம் என்று திரு. ராஜாராம் நாயுடு அவர்கள் சொன்னதைத் தவிர கவர்னர் உரையில் அது இல்லை அவர்கள் சொல்வது வரை நமக்கு நம்பிக்கைதான். கவர்னர் அறிக்கையில் அதைச்சொல்லி இருந்தால் இன்னும் கொஞ்சம் பலம். அவ்வளவுதான். முன்பு வரவுசெலவுத் திட்டத்தை நிதி மந்திரி கொண்டுவந்து பேசியபோது இதைப்பற்றி ஒரு பக்கம் முழுவதும் பேசி இதை முக்கியமாகக் கவனிக்கவேண்டுமென்பதை வற்புறுத்தியிருக்கிருர். இதைக் கவனிக்காவிட்டால் மூன்ருவது ஐந்தாண்டு திட்டமெல்லாம் வீணுய்ப்போய்விடும். என்றும், விலை வாசிகளினுல் இங்கு எல்லோருக்கும் செலவு அதிகமாகும். அதனுல் தொழிலாளர்களுக்கு சம்பளம் அதிகமாகக் கொடுக்கும் படி ஆகும். அதனுல் உற்பத்திப் பொருள்களுக்கு விலை அதிக மாகிவிடும். ஆகையால் விலைவாசிகள் அதிகமாகிவிடாமல் தடுக்க வேண்டும் என்றும் அதைப்பற்றி நாங்கள் கவலைப்படுகிறோம் என்றும் 1960-ம் வருஷத்திலும் 1961 அறிக்கையிலும் சொல்லி யிருந்தார்கள். இந்த வருஷத்தில் அதைப்பற்றி ஒன்றுமே சொல்ல வில்லை. பெரிய பொருளாதார நிபுணர்கள் எல்லாம் அதைக் கவனிப்பதாக இப்போது சொன்ஞர்கள். அவர்கள் இதை ஒன்றும் செய்யமுடியாது என்று கைவிட்டுவிட்டார்கள் என்று தான் நான் நினைக்கிறேன். கூடிக் கூடிப் பேசிக்கொண் டிருக்கிருர்களே தவிர இதைப்பற்றி ஒரு தீவிரமாக அரசாங்கங்கள் நல்ல முறையில் இதை எப்படி செய்தால் நல்லது என்று ஒரு தீர்மானம் செய்யாமல் இருக்கிருர்கள். அப்படியிருந்தால் மக்களுக்குக் கஷ்டம்தான். தவிர விலை ஏற்றத்தை இப்படியே விட்டுக்கொண்டு போனுல் சரியாக இருக்காது என்று நிதியமைச்சரே ஒப்புக்கொண்டிருக்கிருர். அதையே நானும் சொல்லிக்கொள்கிறேன். இப்போது நடந்த தேர்தலில் கூட ஜனங்கள் எல்லாம் இதைப்பற்றி மிகவும் கவலைப் பட்டார்கள். நாங்கள் செய்கிறோம், போகிறோம் என்று சிலர் சொன்ஞர்கள். அது மக்களுக்கு மிகவும் அவசியமான பிரச்சனை என்பதையும் அதைத் தீவிரமாகச் செய்ய வேண்டியதும் அவசியம். அதைப்பற்றி யோசனை செய்வதாக இருந்தால் அது நமக்கு மகிழ்ச்சியைத் தரும். ஆனுல் தேர்தல்தான் போய்விட்டது இனிமேல் வருத்தபடவேண்டியது இல்லை என்று இருந்துவிடக் கூடாது. அதனுல்தான் regret என்ற வார்த்தையைப் போட்டிருக் கிறோம். கவனிக்கவேண்டுமென்று சொல்லாவிட்டாலும் கவனிப்பு மிகவும் அவசியம். இதைக் கவனித்து ஏதாவது காரியம் செய்யா மல் இதை இப்படியே விட்டுவிட்டு தொழிலாளர்களின் சௌகரி யத்தை கவனிக்கிறோம், தொழில்களின் அபிவிருத்தி செய்கிறோம் என்று சொன்னுல் அது ஏழைகளுக்கு பயன்படாது என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

[Sri K. Balasubramanya Ayyar] [24th April 1962

4-10 p.m. அதனுல்தான் அதை வற்புறுத்தி இங்கே பேச வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் அவசியமாக வற்புறுத்த வேண்டியதில்லை. ஏழைகளுக்கு இருக்கிற பெரிய கேள்வி இதுதான். மற்ற விஷயங்களைப்பற்றிக் கேட்கவே இல்லை. அன்றைக்கு நாங்கள் ரூபாய்க்கு பத்து படி அரிசி வாங்கினேமே அந்தநாள் எப்போது வரப்போகிறது என்று ஆசைப் பட்டுத்தான் கேட்டுக்கொண்டு இருக்கிருர்கள். அந்த ஊருக்கு ஆஸ்பத்திரி வைத்தார்களா என்று கூடக் கேட்கவில்லை. இதைத்தான் பெரியதாக நினைத்தார்கள். அதை வற்புறுத்தி இங்கே சொல்ல முக்கியமாக ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக மெட்ரிக் சிஸ்டம் என்று வைத்து மாற்ற ஆரம்பித்தார்கள் அதனுல் விலை 10 ந.பை. அதிகப்படுகிறதே தவிர குறைய வில்லை. கெரசின் ஆயில் 10 ந.பை. அதிகமாய் விட்டது பெட்ரோல் 5-98 ஆக இருந்தது 6-03 ஆகி 5 ந.பை. உயர்ந்து விட்டது. கணக்கிலே குறையக்காணும். அதிகமாகிக் கொண்டிருக்கிறது. இந்த மாற்றம் ஏற்பட ஏற்பட விலைகள் அதிகம் ஆகிறதே தவிரக் குறையக்காணும். அதைத்தான் முக்கியமாகக் கவனிக்கவேண்டும். எதற்காக அதிகப் படுத்த வேண்டும் என்று தெரியவில்லை. எலக்ஷனில் பார்த்தோமே பெட்ரோல் தண்ணீர் மாதிரி ஓடியது. அவ்வளவு பெட்ரோலும் சேர்ந்தால் ஊருக்கு எவ்வளவு க்ஷேமமாக இருக்கும். 5 ந.பை. வீதம் அதிகம் கொடுத்தால் எவ்வளவோ ஆகிவிடும். ஜனங்கள் ரொம்ப கஷ்டப்படுவார்கள். லாரி ஏழைகளின் சாமான்களை ஏற்றிக் கொண்டு போகிறது. பெட்ரோலுக்கு விலை ஏற்றுவது அவ்வளவு சரிதானு என்று பார்க்கவேண்டும். அதே மாதிரிதான் (excise duty). அதைப்பற்றி பேச ஆரம்பித்தாலே உடனே விலை ஏறுகிறது. பேசினுல் போதும் இப்போது மத்திய சர்க்கார் வரவு செலவுத் திட்டத்தில் ஏதோ (duty) போடுகிறேம் என்று சொல்லுகிருர்கள். உடனே இன்றைக்கு சாயங்காலம் விலை ஏறிவிடும் இந்த excise duty -ஐ ஜாக்கிரதையாகப் போடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறது அதனுல்தான். விலை ஏறுவதால்தான் அது எல்லாம் சரியா என்று யோசிக்க வேண்டியிருக்கிறது. அதெல்லாம் மத்திய சர்க்காருடைய வேலை, தங்களுடைய வேலை இல்லை என்று சொல்லலாம். அதிலே இவர்களுக்கும் லாபம் வருகிறபடியால் அவர்களுக்கு எழுதலாம், உணவுப்பொருள், மற்ற முக்கியமான பொருள்களுக்கு விலையை ஏற்றக்கூடாது என்று. Tobacco விலை ஏறி இருக்கிறது. அதனுல் எனக்கு ஒன்றும் கஷ்டம் இல்லை. 10, 20 சேர்த்து பிடிக்கிறவர்கள் இருக்கிருர்கள். அவர்களுக்கு கஷ்டமாக இருக்கும் என்று எனக்கு ரொம்ப கவலையாக இருக்கிறது. உண்மையைக் கவனிக்க வேண்டும் என்று நினைக்கிறேன். அதை indirect tax என்று சொல்லுகிருர்கள். நம் கையைப் பிடிக்கும் போது, அது direct ஆக இருந்தால் என்ன, indirect ஆக இருந்தால் என்ன? அது நம்மை ஏமாற்றும் சப்தமாகத்தான் இருக்கிறது. விலை அதிகமாகக் கூடாது என்பதை மாத்திரம்தான் உங்கள் முன்பாக தெரிவித்துக் கொள்ளுகிறேன். நம் சட்டசபைத் தலைவருக்கு அறிவித்துக் கொள்ளுகிறேன்.

24th April 1962] [Sri K. Balasubramanya Ayyar]

இன்னொன்று நான் கூட ஒரு கேள்வி கேட்டேன். பதில் விரிவாகச் சொல்ல வில்லை. 10 வருஷகாலத்துக்குள்ளாக **administrative expenditure** நிர்வாகச் செலவு இருக்கிறதே, அது எவ்வளவு அதிகம் ஆயிற்று என்று கேட்டேன். பூரணமான பதில் வரவில்லை. எனக்கு பதில் சொல்ல வேண்டியதில்லை. அதைக் கவனித்தால் போதும். அநேகம் பேர்களை நியமிக்கிறார்கள். வேலைக்குத்தகுந்த ஆள் இல்லை. நெல், குறுணி எலி முக்குறுணி என்பார்கள். அதுபோல ஒருவர் செய்த வேலையை 10 பேர் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அதனால் ஒருத்தருக்கொருத்தர் சண்டை அதிகமாய் இருக்கிறது. வேலை நடக்கவில்லை. எல்லா இடத்திலேயும் அப்படி இருக்கிறது என்று சொல்ல முடியாது சில இடங்களில் இருக்கிறது. இதை எல்லாம் நன்றாகக் கவனித்து வேலை நன்றாக நடக்கும் முறையில் மனிதர்களை ஏற்பாடு பண்ணி உத்தியோகத்தைக் கொடுத்து எவ்வளவுக் கெவ்வளவு செலவைக் குறைக்க வேண்டுமோ, பயனை அதிகப்படுத்த வேண்டுமோ, அதற்குத் தகுந்த முறையில் பரிசிலனை பண்ண வேண்டும். 10 வருஷம் ஆகிவிட்டபடியால் சொல்லுகிறேன். அதிகம் செலவாகி இருக்கிறது என்றால், வேலைகளும் ஜாஸ்தியாகி இருக்கிறது என்று சொல்லலாம். தகுந்த ஆட்களை வைத்திருக்கிறோமா, செலவுக்குத் தகுந்த பயன் கிடைக்கிறதா என்று பரிசிலனை செய்ய வேண்டும் என்று அமைச்சர் குழுவுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதைப் பரிசிலனை செய்து ஒரு ஏற்பாடு பண்ண வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்னும் ஒன்றுக்குக் கூட ஒரு குழு ஏற்பாடு பண்ண வேண்டும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். **Cultivating Tenants Act, Fair Rent Act** என்று எல்லாம் சட்டம் போட்டோம். அதில் சுவான்தாருக்கும் கெடுதல் உண்டு; குத்தகைதாருக்கும் கெடுதல் உண்டு. இந்தச் சட்டங்களில் இருக்கிற நுட்ப பேதங்களால் கெடுதல் ஏற்படுகிறது. அதெல்லாம் வந்து 6, 7 வருஷம் ஆகிவிட்டது மேலும் மேலும் திருத்தங்கள் சேர்த்துக்கொண்டே போகிறோம். நாம் அதை கவனித்து என்ன தப்புகள் இருக்கின்றன என்று பார்த்து மறுபடியும் சீர்திருத்தம் பண்ணி ஏற்பாடு பண்ண வேண்டியது அவசியம் என்று சொல்கிறேன். நான் சுற்றுப்பிரயாணம் வரும் போது பல ரெவினியு கோர்ட்டுகளில் 1,500 கேஸ்கள் வரை தீர்மானம் பண்ண முடியாமல் இருக்கின்றன 60, 61-க்கு அதனால் 61-62-க்கு போடவேண்டாம் என்று நினைக்கிறார்கள். ஆகையினால் அதையும் அவசியமாகக் கவனிக்கவேண்டும். இதை எல்லாம் விசாரித்து கவனித்து அரசாங்கத்தாருக்கு ஒரு ரிபோர்ட் கொடுத்தால் ரொம்ப நன்றாக இருக்கும். அந்தச் சட்டங்களை மறுபடியும் அமுலுக்குக் கொண்டுவர ஏற்பாடு பண்ணும் போது நன்றாக கவனித்து பரிசீலனை பண்ணலாம். அதுவும் ரொம்ப அவசியம்.

ஏழை மக்களுக்கு எல்லாம் வீடு கட்டவேண்டும், **Slum** -ஐ சுத்தம் பண்ணவேண்டும் என்று சொல்லுகிறார்கள். வீடுகட்டப் போனால், செங்கல் விலை அதிகமாகி விட்டது. செமன்ட் அகப்படமாட்டேன் என்கிறது; இரும்பு வரவில்லை என்கிறார்கள். எது

முக்கியமாக வீடு கட்டுவதற்கு வேண்டுமோ அதெல்லாம் கிடைக்க கஷ்டமாக இருக்கிறது. எப்படி வீடு கட்டுவது? முன்னால் 100 ரூபாய் ஆகும் என்றால் இப்போது 5,000 ரூபாய் ஆகிறது. அரசாங்கமே கட்டினால், அவர்களுக்கு உருக்கு, இரும்பு செமென்ட் எல்லாம் கிடைக்கலாம். அவர்களே செய்தால் மேலாக இருக்குமே தவிர, ஜனங்களைப் பார்த்து நீங்கள் செய்யுங்கள் என்று உத்தரவு போடுவது சரியான விஷயம் இல்லை. அரசாங்கம் தங்கள் வேலைக்காரர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டும். அவர்கள் எங்கள் வேலைக்காரர்களுக்குச் செய்ய வேண்டும் என்று உத்தரவு போடுகிறார்கள். அது ரொம்ப பெரிய காரியம். அதற்கு சாமான்கள் அகப்படுவது கஷ்டமாக இருக்கிறது Coal அகப்படவில்லை என்று இரயில் ஓடமாட்டேன் என்கிறது. தாம்பரம் போவதற்கு ரொம்ப நேரமாகி விட்டது. கேட்டால் நல்லதாக இல்லை Coal என்று சொல்லுகிறார்கள். எரியாத Coal ஆக இருக்கும் போலிருக்கிறது என்று நினைக்கிறேன். அப்படித்தான் பதில் சொன்னார்கள். அதனால் தான் சொல்லுகிறேன். வரவேண்டிய இடத்திலிருந்து வரவில்லை, அதற்கு பல காரணம். ஒரு காரணம் என்னவென்றால் 40 டன் ஏற்ற வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அதிகமாக ஏற்றிவிட்டார்கள்; வாகன் விழுந்து விட்டது. அதனால் வரவேண்டிய போக வேண்டிய வண்டிகள் வரவில்லை. இப்படி ஆச்சரியமான உத்தரவுகள் எல்லாம் போடுகிறார்களாம். காரியங்களை வேகமாகச் செய்வதன் விளைவு இது. இதை எல்லாம் உடனே கவனிக்கவேண்டும். அப்படிப் பண்ணினார்கள் இப்படிப் பண்ணினார்கள் என்றால் கேட்க சந்தோஷமாக இருக்கிறது. ஜனங்கள் திருப்தி அடையும்படிக்கு எப்படிச் செய்வது? இந்தக் கஷ்டங்களுக்கு எல்லாம் அரசாங்கம்தான் காரணம் என்று சொல்லவில்லை. ஆனால் அதை எல்லாம் நிவர்த்தி செய்ய வேண்டியது அரசாங்கத்தின் கடமை. அதைப்பற்றி அவசியமாகக் கவனிக்கவேண்டும் என்று முக்கியமாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

4-20 p.m. தூத்துக்குடி துறைமுகம் ஆகிய இரண்டையும் செய்வதோடு சேதுசமுத்திர திட்டம் இல்லாவிட்டால் சரியாக இருக்காது என்று சொன்னார்கள். இவற்றைச் செய்வதனால் பணம் அதிகமாகச் செலவாகிறது. அதிலிருந்து அனேகமான ஏற்றுமதிகள் இறக்குமதிகள் நடைபெறுகின்றன. அப்படி சாமான்கள் வந்தால் "கஸ்டம்ஸ்" மூலமாக அதிக வரவு இருக்கவேண்டும். அதை வெளியே விட்டுவிடக் கூடாது. முக்கியமாக இதை முதலில் அறிக்கையில் தெரிவிக்கும்போது நாம் எடுத்துச் சொன்னோம். தூத்துக்குடி துறைமுகம் பூர்த்தி செய்ய வேண்டும். அதனால் அதிகமான சாமான்கள் ஏற்றுமதி இறக்குமதி ஆகிறது. கஸ்டம்ஸ் டியூடி பணம் அதிகமாக வருகிறது. அதை அவர்கள் வாங்கிக் கொண்டு போய்விடும்படி விடக்கூடாது. அதில் அதிகமான பங்கு கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தி மத்திய சர்க்காருக்கு எழுதி அதிலிருந்து வரும் வருமானப் பங்கை அதிகப்படுத்த வேண்டும். அதை நிதியமைச்சர் அவர்கள் முக்கியமாக கவனிப்பார்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். இரண்டு துறை முகங்கள் நமக்கு வந்தது என்று சந்தோஷப்பட்டாலும் அதில் வரும்

24th April 1962] [Sri K. Balasubramanya Ayyar]

வருமானம் அங்கு போகிறது என்றால் அதில் சந்தோஷம் இருக்கமுடியாது. அதில் வரும் லாபம் அதிகமாக வேண்டுமென்பதில் கவனம் செலுத்தவேண்டும்.

இப்போது உள்ள இலாக்காக்களில் இந்த ஹெல்த் மினிஸ்டரி என்று இருக்கிறதே அதனுடைய காரியங்கள் 10 வருஷ காலமாக மிகக் குறைவு. அதிகமாக ஒன்றும் நடைபெறவில்லை. இப்போது டைரக்டர் ஆஃப் மெடிகல் சர்வீஸ் ஆக ஒரு உயர்ந்த பெண்மணி இருக்கிறார்கள். இப்போது இந்த இலாகா மந்திரியாக இருப்பது ஒரு பெண்மணிதான். எல்லாம் பெண்மணிகளாக அமைந்திருப்பதால் இதை நன்றாகக் கவனிக்க வேண்டியது மிகவும் அவசியம். (இடைப்பேச்சு. மணியாக வேலை செய்வார்கள்) ஆம். மணிகளாக வேலை செய்வார்கள். அதை நானும் வரவேற்கிறேன். அந்த அம்மாள் இன்று இங்கு இல்லை. ரொம்ப பேர் கஷ்டப்படுகிறார்கள். ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் கூட்டம் கணக்கில்லாமல் இப்போது ஆய்க்கொண்டு வருகிறது. அதைக் கவனிப்பதற்கு ஆள் குறைவாக இருக்கிறது. அதனால் ரொம்ப பேர் கஷ்டப்படுகிறார்கள். ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் இருக்கிற நிலைமை மிகவும் கஷ்டமான நிலைமை. இவற்றை நிவர்த்தி செய்வது மிகவும் அவசியம். மனிதனுடைய உடல் நலம் நன்றாக இருக்கவேண்டும். அதை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். எமர்ஜன்சி வார்டு என்று இருக்கிறது. அவசாத்திற்கு வேண்டிய மருந்துகள் அங்கு இருப்பதில்லை. டாக்டர் சிவானந்தம் அவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இதைப்பற்றி சொல்வார்கள் என்று நினைக்கிறேன். நாங்கள் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. அனேகமாக எமர்ஜன்சி வார்டில் அவசரமான மருந்துகளோடு கூட சில சமயம் ஆட்களே இருப்பதில்லை. அந்த மாதிரி எல்லாம் இருக்கக்கூடாது. திடீரென்று ஒருவருக்கு ஆபத்து ஏற்படும். அதற்கு அவசரமாக செய்வதற்கு வேண்டியவைகள் தயாராக இருக்கவேண்டும். ஒரு நாளைக்கு ஆள் யாரும் வரவில்லை என்றால் அந்த வார்டு அவசியமில்லை, மூடிவிடுகிறேன் என்று சொல்வதற்கில்லை. ஆகையால் ஹெல்த் மினிஸ்டரியின் காரியங்கள் மிக நன்றாகக் கவனிக்கவேண்டியது அவசியம் என்று வற்புறுத்திச் சொல்லிக்கொள்கிறேன்.

கடைசியாக உபாத்தியாயர்கள் பற்றி பல விஷயங்கள் உண்டு. கனம் சுப்ரமணியம் அவர்கள் பல காரியங்களில் அவர்களுக்கு நன்மைகளை செய்திருக்கிறார்கள். அம்மாதிரி நல்ல காரியங்களை இந்தத் தடவையும் செய்யவேண்டும். அவை போதுமென்று நிறுத்திவிடக்கூடாது. முக்கியமாக பென்ஷன் கொடுப்பதில் பல பேருக்கு 1—6—60-க்கு முன்னால் வேலையைவிட்டு ஓய்வு பெற்றவர்களுக்குக் குறைவாகவும் அதற்குப் பிறகு இருப்பவர்களுக்கு அதிகமாகவும் பென்ஷன் இருக்கிறது. அதை நன்றாகக் கவனிக்க வேண்டும். வீட்டுவாடகை கொடுக்க சௌகரியம் வேண்டும். அதைப் பற்றியெல்லாம் விளக்கமாக திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி சொல்வார். அது அவருடைய இலாகா என்று கூட சொல்லலாம். அதாவது அதையெல்லாம் அவ்வளவு நன்றாகக் கவனிப்பார்.

[Sri K. Balasubramanya Ayyar] [24th April 1962

இருந்தாலும் நான் ஒன்றும் அதைப்பற்றி பேசவில்லை என்று சொல்வார்களே என்பதற்காக சொல்கிறேன். பல உபாத்தியாயர்கள் நான் போன சமயத்தில் என்னைச் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதனால் அந்தக் கடமையை நான் செய்கிறேன். கட்டாயப் படிப்பு என்று சொல்கிறோமே தவிர நல்ல உபாத்தியாயர்கள் இருந்தால்தான் அது நன்றாக இருக்கும். இல்லையென்றால் அது கட்டாயப் படிப்பாகவே இருக்கும். உபாத்தியாயர்கள் குழந்தைகளை நல்லமுறையில் முன்னேற்றத்திற்குக் கொண்டுவந்தால்தான் அது பிற்காலத்திற்கு நம் தேசத்திற்கு நன்றாக இருக்கும். இல்லாவிட்டால் அது கெடுதலாகத்தான் இருக்கும். ஆகையால் உபாத்தியாயர்களுக்கு நல்ல வசதிகளைச் செய்து கொடுத்து நல்ல படிப்பு உள்ளவர்களை கொண்டுவந்து கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்வது நல்லது. குழந்தைகளைக் கவனிப்பதைவிட வேறு முக்கியமானது ஒன்றும் இல்லை. அதைக் கவனித்து கல்வித் திட்டத்தை நல்ல முறையில் தேசத்தில் பரப்ப வேண்டும். ஆறு வயதிலிருந்து பதினோரு வயது வரை பள்ளியில் சேர்த்துவிடுவோம் என்பதால் பிரயோஜனம் இல்லை. கல்விமுறை நல்லவிதமாக இருக்க வேண்டும். அதற்கு நல்ல உபாத்தியாயர்கள் வேண்டும். அதைக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த அறிக்கையில் பல முக்கியமான விஷயங்களை விட்டு விட்டார்கள் என்பதைத் தவிர பல நல்ல காரியங்களைச் சொல்லியிருக்கிறார்கள். இன்னும் பல நல்ல காரியங்களை செய்வதாகவும் சொல்லியிருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பல காரியங்கள் செய்யப்போவதாக சொல்லப்பட்டிருக்கிறது அறிக்கையில். கடைசியாக ஒன்று சொல்லவேண்டும். இந்த அறிக்கையைப் பார்க்கும்போது ஏதோ நாளைக்கு வரிபோடுவோம் என்பது போல ஒரு நினைப்பு வருகிறது. அதில் இருக்கிற வார்த்தைகளில் அந்த வரி விஷயம் முடங்கியிருப்பதாகத் தெரிவதால் எனக்கு அதைப்பற்றி பயமாக இருக்கிறது. இப்போதே மனிதன் இந்த விலைவாசிகளினால் வாழ்க்கை எப்படி வாழ்வது என்று தீர்மானிக்க முடியாமல் இருக்கிற நேரத்தில் வரி வேறு போட்டால் ஒன்றும் சரியாக இருக்காது. மூன்றாவது திட்டத்தை நிறைவேற்றுவதற்கு வரிபோடுகிறோம் என்று சொல்லி கடைசியில் ஏழைகளை வருத்துவது சரியல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். கவர்னர் அப்படி நினைக்கவில்லை என்று நான் நினைத்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன். (இடைப் பேச்சு. வரி இவர்கள் தானே போடுவார்கள். கவர்னரா போடுகிறார்?) ஆமாம் அவர் போடமாட்டார். இவர்கள்தான். இதுகூட இவர்களுடைய அறிக்கைதான். ஆகையால் கவர்னர் அறிக்கையில் ஒன்றும் அதிகமாகப் பேசவேண்டிய அவசியமில்லை என்றுகூட சொல்லலாம். ஆகையால் ஒன்றும் அதிகமாக வரி போடமாட்டார் என்று சொல்லலாம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வரிபோடாமல் கூட நடத்தலாம் என்று சிலர் சொல்லியிருக்கிறார்கள். அதற்குள் எத்தனையோ ஆபத்துக்கள் வரலாம். சீனாக்காரன் வருவது ஒரு பக்கம் பயமாக இருக்கிறது. எல்லா

24th April 1962] [Sri K, Balasubramanya Ayyar]

வற்றையும் பார்த்துத்தான் தீர்மானம் செய்யவேண்டும். மக்களுக்குச் சௌகரியமாக இருக்கும் வகையில் செய்யவேண்டு மென்று கேட்டுக்கொண்டு இந்த அறிக்கையை நான் சந்தோஷ மாக சில குறைகளை மட்டும் சொல்லி வரவேற்கிறேன் என்று சொல்லி முடித்துக்கொள்கிறேன்.

**Sri S. R. P. PONNUSWAMY CHETTIAR:** தலைவர் அவர்களே, கவர்னர் பெருமானுடைய பேருரையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். எனக்கு முன்பு பேசிய நண்பர்கள் விளக்கமாக இன்றைய தினம் நாட்டின் தேவை கள் என்ன என்று ஓரளவு சொல்லியிருக்கிறார்கள். குறிப்பாக, கவர்னர் உரையில் விலைவாசிகளின் கட்டுப்பாடுகள் குறித்து ஒன்றுமே சொல்லப்படவில்லை என்று சொன்னார்கள். வாஸ்தவம். சொல்லியிருக்கத்தான் வேண்டும். அனேகமாக இது மிக முக்கிய மான விஷயமாக இருக்கிறபடியால் பட்ஜெட்டில் அது வருமென்று நான் எதிர்பார்க்கிறேன். ஆனால் குறிப்பாக தொழில்துறை மிக முக்கியமான பிரச்னையாக இன்று நாட்டிலே இருந்து வருகிறது. சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலே நமது ராஜ்யத்தை பொறுத்த அளவில் தொழில் துறையில் நாம் அடைந்திருக்கிற முன்னேற்றம் அகில இந்திய ரீதியிலே எல்லோரும் போற்றும்படி யான முன்னேற்றம். உண்மையில் பிரமாதமான முன்னேற்றம். அந்த முன்னேற்றத்திற்கு ராஜ்ய மக்களின் சார்பாக அமைச்ச ரவையை குறிப்பாக தொழில் அமைச்சர் கனம் வெங்கட்ராமன் அவர்களை மிகவும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். பொரு ளாதார அபிவிருத்தி, தொழிற்சாலைகள் இவற்றை எடுத்துக் கொண்டால் தமிழ்நாட்டு சரித்திரத்திலேயே இதுவரை இல்லாத அளவில் பெரும் பெரும் தொழில்கள் இந்த நாட்டில் தோன்றி இருக்கின்றன. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பார்த்தால் சென்ற இரண்டு ஐந்தாண்டுகளிலே எவ்வளவு பெரிய தொழில்கள் இந்த நாட்டிலே வந்தனவோ அந்த வேகத்தில் தொடர்ந்து நடத்த முடியுமா என்கிற நிலையிலே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் இருக்கிறது என்று நான் கருதுகிறேன்.

இருக்கிற தொழில்களுக்கு சரியான முறையிலே மின்சாரம் இல்லை என்கிற புகார் ஒருபுறம். எஞ்சினீரிங் தொழில்களுக்கு coal-coke இல்லை என்ற புகார் ஒருபுறம். இந்தமாதிரி பெரும் தொழில் வளர்ச்சிக்கு ஓரளவு தடையாகத்தான் இருந்து கொண்டு இருக்கிறது. அதைப் பார்ப்போமேயானால் பல வருஷங் களாக இந்தப் பிரச்னை இருந்து வருகிறது. coal-coke பிரச்னை ஏன் தீர்க்கப்படவில்லை என்று மிகவும் குறிப்பாக அரசாங்கம் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். Coal கிடைக்கவில்லை, coke கிடைக்கவில்லை என்ற பிரச்னை இன்றல்ல, பல வருஷங்களாக இருந்து வருகிறது. இந்தப் பிரச்னை உடனடியாக முடிவு செய்யப்பட வேண்டும். இல்லை யென்றால் நமது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே தொழில் வளர்ச்சியை கண்டிப்பாகப் பாதிக்கும் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை என்று நினைக்கிறேன். ஒருபக்கம் ரயில் போக்கு

4-30 p.m.

[Sri S. R. P. Ponnusamy Chettiyar] [24th April 1962

வரத்து நமக்கு தேவையான அளவு சாமான்களைக் கொண்டு வர முடியவில்லை என்ற பிரச்னை. ஒரு வியாபாரி என்ற முறையில் நான் நினைக்கிறேன். அரசாங்கமே இரண்டு கப்பல்களை வாங்கலாம். அல்லது கப்பல் கம்பெனிக்கு **subsidy** மான்யம் கொடுத்து இரயில் சார்ஜ் எவ்வளவு ஆகிறதோ அதைவிட ஜாஸ்தியாக கப்பல் சார்ஜ் ஆனால் அதை மானியமாக கொடுத்து—தொழில்களைப்பாதிக்காத அளவில் **coal, coke-** ஐ இந்த நாட்டுக்குக் கொண்டுவந்து சேர்க்க வேண்டும் என்று வற்புறுத்த விரும்புகிறேன். ஆனால் என்றுமே கப்பல்களை வைத்து வெளியே இருந்து கொண்டு வருவதைக் காட்டிலும், நமது ராஜ்யத்திலே ஒரு **coke oven plant** போட வசதியும் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அதை அரசாங்கம் ஆராய்ந்து தனியார் துறையாக இருந்தாலும் சரி, அல்லது அரசாங்கம்-பொதுத்துறையாக இருந்தாலும் சரி ஏதாவது ஒரு துறையிலே நமது இராஜ்யத்துக்கு வேண்டியதை அவசியமாகச் செய்யவேண்டும் என்று நான் மிகவும் வற்புறுத்த விரும்புகிறேன்.

மின்சாரத்தைப் பொறுத்த அளவில் நான் சொல்ல வேண்டியதே இல்லை. அகில இந்திய ரீதியில் பார்ப்போமேயானால் சென்ற ஐந்து வருஷங்களிலே நாம் மிகவும் பெருமைப்படக்கூடிய முறையிலே மின்சார உற்பத்தியைப் பெருக்கி இருக்கிறோம். அந்தப் பெருமை ஒருபுறம் இருக்க, நமது தொழில் வளர்ச்சி மின்சார வளர்ச்சியைக் காட்டிலும் வேகமாகச் சென்று கொண்டிருக்கிறது. இப்போது பெரும் தொழில்கள் இந்த நாட்டிலே வர வசதி இல்லை என்று நினைக்கிறோமே, அப்படி உடனடியாக தொழில் வளம் வேண்டுமென்று கருதுகிற நாம் சிறுதொழில்கள், நடுத்தர தொழில்கள் ஏராளமாக பட்டிதொட்டிகளிலும் ஆரம்பிக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். அந்த நிலை இருக்கும்போது மின்சாரம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே, நாம் போட்டிருக்கிற கணக்கும்கூட போதாது, அணுசக்தி மின்சார நிலையம் சீக்கிரமாக வரவேண்டும். அணுசக்தி மின்சார நிலையம் ஒன்று வந்தால் மட்டும் போதாது. **Thermal Plant** ஒன்று அல்லது இரண்டு போட முயற்சி செய்ய வேண்டுமென்று நான் கருதுகிறேன். ஆனால் என்னைப் பொறுத்த அளவில் ஒரு வகையில் சந்தோஷப்படுகிறேன். இப்போது மின்சார இலாகா நமது அமைச்சர் கனம் வெங்கட்ராமன் அவர்கள் கையில் இருக்கிறது. உலகம் சுற்றி பார்க்கிறவர், உலகத்தின் பல பகுதிகளில் சென்று அணு சக்தி மின்சார நிலையங்களைப் பார்த்து வந்திருக்கிறார். ஒரு காலத்திலே சொன்னார்கள். அணு சக்தி மின்சாரம் தெர்மல் மின்சாரத்தைக் காட்டிலும் அல்லது ஹைட்ரோ மின்சாரத்தைக் காட்டிலும் விலை அதிகமாக இருக்கிறபடியால் தொழில்களைப் பாதிக்கும் என்று ஒரு காலத்தில் இருந்தது. ஆனால் சமீபத்திலே பத்திரிகைகளில் பார்த்தோம் இங்கிலாந்தில்கூட குறைந்த விலையில் அணு சக்தி மின்சாரம் கிடைக்கும் என்று முடிவு எடுத்து அணு சக்தி மின்சாரத்தை உற்பத்தி செய்யும் நிலையங்களை அதிகப்படுத்தி இருக்கிறார்கள். நவீன முறைகளை வைத்து குறைந்த செலவில் செய்யப்பட

24th April 1962] [Sri S. R. P. Ponnuswamy Chettiyar]

முடியும் என்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அதை சாதகமாக வைத்துக் கொண்டு இன்னும் எவ்வளவு அதிகமாக மின்சாரத்தைப் பெருக்க முடியுமோ அவ்வளவும் பெருக்குவதற்கு வசதி செய்ய வேண்டும். சிறு தொழில்கள், நடுத்தர தொழில்களைப் பொறுத்த அளவிலே இன்றையதினம் சென்ற 5 வருஷ தொழில் வளர்ச்சியின் வேகம் நம் இராஜியத்தில் எங்கு சென்று பார்த்தாலும் எல்லோருமே தொழில்களை ஆரம்பிக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். வியாபாரிகள் எல்லாம் ஆரம்பிக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். அவர்களுக்கு என்ன செய்வது, எந்தத் தொழிலை ஆரம்பிப்பது என்ற பெரும் பிரச்னை முன்னால் நிற்கிறது. தொழில் வளர்ச்சி வேண்டுமென்று விரும்புகிற நாம், யாராவது ஒருவர் தொழிலை ஆரம்பிக்க வேண்டும் என்று எண்ணி வந்தால் அவர்களுக்கு நல்ல டெக்னிகல் அட்வைஸ், பிராஜகட்ரிபோர்ட்டுடன் வைத்து இந்தத் தொழிலை ஆரம்பிக்கலாம். இவ்வளவு முதலீடு வேண்டும், இவ்வளவு லாபம் இருக்கும், அதற்கு மூலப்பொருள் இங்கே கிடைக்கும் என்ற திட்டத்தை கையில் அரசாங்கம் வைத்திருக்க வேண்டும். அதை வைத்துக் கொண்டு விரும்புகிறவர்களுக்கு நல்ல முறையில் வழிகாட்டக் கூடிய நிலை இருந்தால் இன்று தமிழ்நாட்டிலே தொழில் செய்ய வேண்டுமென்று இருக்கிற ஆர்வம் சரியான முறையில் பயன்படும், தமிழ்நாட்டைப் பொறுத்த அளவில் தொழில் வளர்ச்சியைப்பற்றி சந்தேகப்படவேண்டியதில்லை. அவ்வப்போது இராஜ்ய அரசாங்கத்தில் இருக்கிற பல இலாக்காக்களையும் ஒன்றாக இணைத்து அன்றாட தொழில்கள் நிலை என்ன என்று தெரிந்து வைக்கக் கூடிய முறையில் செக்ரடரி level-ல் சிறந்த நிபுணர்களை ஏற்படுத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அதேமாதிரி சிறு தொழில்கள் பெருந்தொழில்கள் ஆரம்பிக்கப் கூடிய நிலையில் நம் நாட்டில் மட்டுமல்ல, அகில இந்திய ரீதியில் பார்த்தாலும் எல்லா இராஜ்யங்களிலேயும் தொழில் செய்ய வேண்டும் என்ற ஆர்வம், வேகமாக முன்னேற வேண்டும் என்ற எண்ணம் காணப்படுகிறது. ஏதாவது தொழிலை ஆரம்பிக்க வேண்டுமென்றால், நாட்டின் தேவை என்ன? லைசென்சு கொடுத்தது போக மேற்கொண்டு தேவைப்படுகிற பொருள் என்ன? என்று அன்றாடம் தெரியவேண்டும். ஏதோ 6 மாதம் 3 மாதத்திற்கு ஒரு முறை பத்திரிகையில் பார்த்தால் அதைப் பரிசீலனை செய்து ஒரு முடிவு எடுத்து மறுபடியும் ஒரு தொழிலை ஆரம்பிக்கும் முறையில் சென்று பார்த்தால் licensing capacity is over எவ்வளவு நம் நாட்டுக்கு தேவையோ அது கொடுக்கப்பட்டு விட்டது என்ற நிலை இருக்கிறது. இந்த நிலை மாறவேண்டும். எதற்காக நான் சொல்லுகிறேன் என்றால் நாட்டின் தேவை என்ன, கொடுக்கப்பட்ட லைசென்ஸ்சுகள் எவ்வளவு, இன்னும் எவ்வளவு மனுக்கள் பரிசீலனையில் இருக்கின்றன. அவ்வளவும் சேர்ந்து குறைவு இருக்கும் என்றால் மேற்கொண்டு விண்ணப்பங்களை வாங்கவேண்டும். அந்த நிலை வரவேண்டும். இரண்டாவதாக தொழில்களை ஆரம்பிப்பவர்களுக்கு எனக்கு முன்பு பேசியவர்களும் சொன்னார்கள்—செமின்டு, ஸ்டீல் கிடைப்பது இல்லை என்று

[Sri S. R. P. Ponnuswamy Chettiyar] [24th April 1962

பிரச்னே இருக்கிறது. நான் முன்பு ஒரு முறைகூட சொல்லியிருக்கிறேன். ஒரு குறைந்த பக்ஷ அளவு **factory** கட்டுகிறோம் என்றால், ஒரு 75 டன் சிமென்ட் தேவை, அல்லது 50 டன் இரும்பு தேவை என்றால் அந்த 75 டன் 50 டன் உடனடியாகக் கொடுக்கவில்லை என்றாலும் அதில் 75 சத வீதம் உடனடியாக நமது இராஜிய ரீதியில் கொடுக்க நமக்கு அதிகாரம் வேண்டும். **Director of Industries** கையில் கொடுத்து உடனடியாக **allotment** பண்ண வேண்டும், கணக்கெல்லாம் பின்னால் பார்த்துக்கொள்ளலாம் என்று அப்படி இருந்தால் தொழில் வளர்ச்சி துரிதமாக வரும். சிமென்ட் நிலையைப் பார்த்தால் சாதாரணமாக ஒரு **Factory** கட்டவேண்டுமென்றால் 150 டன் சிமென்ட் வேண்டும் என்று எழுதினால் மூன்று மாதத்துக்கு ஒரு முறை 15, 20 டன் என்று வாகன் வருகிறது. எப்போது **Factory** கட்டி முடிப்பது? தொழிலை எப்படி ஆரம்பிப்பது? முதலீடு என்ன? வட்டி என்ன? தொழில் செய்கிறவர்கள் தைரியமாக தொழில் செய்ய முன் வருவார்களா? என்பதை உடனடியாகக் கவனிக்க வேண்டும். சிமென்ட் பேக்டரி இன்னும் நமக்கு வேண்டும். நம் இராஜ்யத்தில் இரண்டு சிமென்ட் பாக்டரி வருவதைக் குறித்து சந்தோஷப்படுகிறேன். மேற்கொண்டு சிமென்ட் பாக்டரி வர வசதிகள் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். பரிசிலனை செய்து அதையும் ஏற்படுத்த வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

நண்பர்கள் பேசினார்கள். நகரசபை நிர்வாகங்களைக் குறித்து; பஞ்சாயத்து கவுன்சிலுக்கு இவ்வளவு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதாக. உண்மையில் வரவேற்கிறேன். ஆனால் அதே சந்தர்பத்தில் நான் சொல்ல விரும்புகிறேன். நகர சபைத் தலைவர்களுக்கு இன்று பஞ்சாயத்து தலைவர்களுக்கு இருக்கிற அதிகாரம்கூடக் கிடையாது. நகர சபைத் தலைவர்களுக்கு அதிகாரம் சரியான முறையில் வழங்கப்பட வேண்டும். ஆங்காங்கே இருக்கிற பிரச்னைகளை ஒழுங்காக நிவர்த்தி செய்ய வேண்டுமானால் நிர்வாகத் தலைமையில் உள்ளவர்களுக்கு ஓரளவு அதிகாரம் இருந்தால் தான் உடனடியாக பிரச்னைகளை தீர்க்க முடியும் என்பதை யோசனை செய்து பார்க்க வேண்டும்.

4-40 p.m. அதேமாதிரி இந்த ராஜ்யத்தில் சென்னை ஒன்றுதான் கார்ப்பரேஷன், கோவை, மதுரை போன்ற நகரங்களை ஏன் கார்ப்பரேஷன்களாக ஆக்கக்கூடாது என்று எனக்குத் தெரியவில்லை. பல வருஷங்களாக இந்தக் கோரிக்கை இருந்துகொண்டே வருகிறது. ஒவ்வொரு முறையிலும் தள்ளி வைத்துக்கொண்டே போகிற நிலைமையில் இருக்கிறது. புதிதாக வந்திருக்கிற அமைச்சர் அவையிலே கோவை, மதுரை போன்ற நகரங்களை கார்ப்பரேஷன்களாக அவசியம் செய்ய முயற்சிப்பார்கள் என்றே நான் நம்புகிறேன். ஏகதேசம், மதுரையும், கோவையும் ஒன்றாக இருந்தாலும்கூட மதுரை மாத்திரம் "class by itself" என்றிருக்கிறது. கோவை போல வளர்ந்து வருகிற நகரங்களில் ஒரு திறமையான நிர்வாகம் வேண்டுமென்றால் உயர்ந்தரக கமிஷனர்

24th April 1962] [Sri S. R. P. Ponnuswamy Chettiyar]

அவசியம் வேண்டும். உயர்ந்த ரக கமிஷனர் வேண்டுமென்றால் அவர்களுக்குக் கொடுக்கிற சம்பள உயர்வு சரியான முறையில் மதுரையின் அந்தஸ்துக்கு இருந்தால்தான் நல்ல நிர்வாகி நமக்குக் கிடைப்பார். கோவை நகரம் அதை விரும்புகிறது. அந்த சம்பளத்தை அவர்களே கொடுக்கிறார்கள். இதில் அரசாங்கத்திற்கு நஷ்டம் இருப்பதாக தெரியவில்லை. ஏன் பிறகு கோவையை மதுரையுடன் இணைக்கக்கூடாது? மதுரை மாத்திரம் ஏன் "class by itself" என்று சொல்வது என்று விளங்கவில்லை. அதைச் செய்யவேண்டுமென அமைச்சரை வற்புறுத்தி நான் கேட்டுக்கொள்கிறேன்.

எனக்கு முன்பு பேசிய நண்பர் திரு. ராஜாராம் அவர்கள் ஒழுங்காகச் சொன்னார்கள், குடி தண்ணீர் விஷயத்தைப் பற்றி. இது உண்மையில் மிக முக்கியமான விஷயம். 20 வருஷம் அல்லது 30 வருஷங்களுக்கு முன்பு போடப்பட்ட திட்டம், கோவை ஜனத்தொகை ஒரு லட்சம் இருக்குமென்று நினைத்துப் போடப்பட்ட திட்டம் இன்றைய தினம் இருக்கிறது. இன்று கோவையின் ஜனத்தொகை $3\frac{1}{2}$ லட்சம். அதுபோக அன்றாடம் வெளியிலிருந்து வருகிறவர்கள் உபயோகிக்கிற, எடுத்துப்போகிற தண்ணீர் ஒரு புறம். கோவையைச் சுற்றி பத்து மையில் அளவில் சிறுவாணி தண்ணீரைத் தவிர வேறு தண்ணீர் கிடைப்பதில்லை. இந்த நிலையில் வெயில் காலம் வந்து விட்டால் கோவை நகரத்திலுள்ள சகோதரிகள் தண்ணீருக்குப் படுகிற பாடு சொல்லவே முடியாது. இதை நான் முன்பு ஒரு தடவை சொல்லியிருக்கிறேன். பல இடங்களில் சகோதரிகள் 'எங்களுக்கு எப்போதுமே தீபாவளியாகத்தான் இருக்கிறது' என்று கூறினார்கள். இரண்டு மணிக்கு தண்ணீர் வரும். ஐந்து மணிக்கு நின்றுவிடும். ஏதோ ஒரு நாள் தீபாவளி கொண்டாடலாம். வருஷம் பூராவும் தீபாவளியாக இருந்தால் மனிதனுடைய கதி என்னவது? ஜனங்களுடைய உடல் நலம் மிகவும் அதனால் பாதிக்கப்படுகிறது. கோவையின் நிலையை இன்றைக்குப் பார்த்தால் வெளிஉலகில் அதை லங்காஷயர், மான்செஸ்டர் என்று கூறும் அளவுக்கு தொழில் துறையில் முன்னேறிய நகரம் என்று சொல்கிறார்கள். நகரத்தில் உள்ள என்னைப்போன்றவர்களுக்குத்தான் அந்தக் கஷ்டம் தெரியும். 1955-ல் நான் நகரசபைத் தலைவனாக இருக்கும்போது போடப்பட்ட திட்டம், எஸ்டிமேட் எல்லாம் ரெடியாக இருக்கிறது. அன்று போடப்பட்டது என்ன காரணத்தால் இதுவரையில் முடிவாகாமல் இருக்கிறது என்பதுதான் எனக்கு விளங்கவில்லை. காரணம் எதுவாக இருந்தாலும் சரி, உடனடியாக அது முடிக்கப்படவேண்டும். சிறுவாணி ஆரம்ப இடம் கேரளாவைச் சேர்ந்ததாக இருந்தாலும்கூட பெரிய நீர்ப்பாசனத் திட்டம். பரம்பிக்குளம் திட்டம் ஒப்பந்தத்திற்கு வந்த பிறகு குடிதண்ணீர் திட்டத்திற்கு கஷ்டம் இல்லை. பாசனத் திட்டத்துக்கும் குடிதண்ணீர் திட்டத்துக்கும் சம்பந்தமில்லை. கேரள அரசாங்கத்தில் எந்தவிதச் சிக்கலும் இருக்கமுடியாது. இருந்தாலும் உடனடியாக அதை நிவர்த்தி செய்யவேண்டும்.

[Sri S. R. P. Ponnuswamy Chettiyar] [24th April 1962

அதுதான் என் கோரிக்கை. கோவையின் கஷ்டத்தில் இன் னென்று சொல்ல விரும்புகிறேன்.

1955-லே அந்த கோவை நகரத்தில் இருந்த குடிசைகளைக் கணக்கெடுத்துப் பார்த்தேன். அந்த நேரத்தில் 2,500 குடிசைகள் அங்கு இருந்தன. இன்று தேர்தல் சமயத்தில் நகரத்தை நன்ருக சுற்றி பார்த்ததில் நான் நினைக்கிறேன் கிட்டத்தட்ட 5,000 குடிசைகள் அங்கு இருக்கின்றன. நகரத்தில் இதனுல் சுகாதாரம் பாதிக்கப்பட்டிருக்கிறது. நகரத்தின் வளர்ச்சி குன்றியிருக்கிறது. இந்நிலை மாறவேண்டும். அரசாங்கம் ஸ்லம் கிளியரன்ஸ் **Slum Clearance** என்ற தலைப்பில் நன்ருகப் பணம் ஒதுக்கி யிருந்தாலும்கூட உடனடியாக அதை செயலாக்குவதற்கு மேற் கொண்டு பணம் ஒதுக்க வழிவகை செய்யவேண்டும். அதுபோக இன்னும் ஏராளமாக வீடுகள் வேண்டும். ஒரு பக்கம் **Industrial Housing** இன்னெருபக்கம் **Slum Clearance, Middle Class Housing.** இந்தமாதிரி ஹவுசிங் திட்டங்கள் வந்திருந்தாலும்கூட குறைந்த வருமானக்காரர்கள் என்று சொல்லுகிறவர்களுக்கு இதில் ஒன்றுமில்லை. அவர்களுக்குக் கொஞ்சம்கூட பொருத்தம் இல்லாமல் இருக்கிறது. ரூ. 400 லிருந்து ரூ. 500-க்குள் வாங்குகிறவர்கள்தான் அதில் வாங்குகிற கடன்களை திருப்பிக் கொடுத்து தன்னுடைய வாழ்கையை நடத்தக்கூடிய நிலையில் இருக்கமுடியும். ரூ. 100 லிருந்து ரூ. 250 வரை சம்பளம் வாங்குகிறவர்களுக்கு வீடுகள் வேண்டுமென்று நினைத்தால் அவர்களுக்கு என்று திட்டமே இது வரையில் இல்லை. அதை அரசாங்கம் உடனடியாகச் செய்ய வேண்டும். வருமானம் எதுவாக இருந்தாலும் சரி, 15 வருஷம் அல்லது 20-ம் வருஷம் கழித்துத் தங்களுக்குச் சொந்தமாக ஒரு வீடு கிடைக்குமென்ற நம்பிக்கை அவர்களுக்கில்லை. அப்படி யிருந்தால் வாழ்க்கையில் ருசி இருக்காது. 15 என்பதை 25 வருஷமாக வேண்டுமானுலும் வைத்துக்கொள்ளலாம். அதிகாரி களைக் கலந்து எந்தமுறையில் திருத்தியமைக்கவேண்டுமோ அந்த முறையில் திருத்தியமைத்து அவர்களுக்கு வீடு கொடுக்கிற நிலைமையை உடனடியாக ஏற்படுத்தவேண்டும். எல்லா நகரங் களிலும் இதேபோன்று இருக்கிறது. காரணம், நமது வேகமான வளர்ச்சி, தொழில் துறையில் வளருகிறோம், விவசாயத்துறையில் வளருகிறோம், கல்வித்துறையில் வளருகிறோம், இந்த வளர்ச்சி யெல்லாம் இயற்கையாகவே நகரங்களில் வந்து மோதுகின்றன. இதனுல் அவ்வப்போது எழுகின்ற பிரச்னைகளை உடனடியாக நகர சபையில் தீர்க்கமுடிவதில்லை, பிரச்சனைகள் அதிகமாகிக்கொண்டே போகிறது. அவைகளை வேகமாக நிவர்த்தி செய்தால்தான் ஓரளவு கட்டுப் படுத்த முடியுமே தவிர வருகிற கோளாறுகள் அதிகமாக இருந்து அதை நிவர்த்தி செய்வது குறைந்துபோனுல் அதுமோசமாகிவிடும். அப்படி வளரவிடக்கூடாது. அதைப் பார்க்கவேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கவர்னர் அவர்களுடைய உரை, சுருக்கமாக இருந்தாலும் மிக அழகாக இருந்தது. இன்னும் பல விஷயங்களை அதில் குறிக்கப் படவில்லை என்ருலும்கூட, எவ்வளவு விஷயங்களைக் குறித்தாலும்

இன்னும் ஒன்றிரண்டு விட்டுத்தான் போகும் என்ற நிலையில் தான் இருக்கும். முழுக்க முழுக்க எல்லாவற்றையும் அறிக்கையில் குறிப்பது என்றாலும் கஷ்டம் என்பதை நாம் உணரவேண்டுமென்று சொல்லிக்கொண்டு கவர்னர் அவர்கள் உரையை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன்.

* SRI G. KRISHNAMOORTHY : Mr Chairman, Sir, on page 6 of His Excellency the Governor's Address, we find this paragraph, namely, 'The scheme of compulsory primary education is being extended to cover the whole State in the current financial year. The targets of enrolment have been exceeded beyond all expectations largely through the inducement of the free mid-day meal scheme. It is a fact that we have got more children into schools. But what actually the teacher has been able to do at school with this large number of children has to be examined. The Government very recently, a few years ago, brought in what is called the teacher-pupil ratio system, according to which even to-day we find the necessity for a teacher to handle 65 to 70 children in infant classes for a few months till the Deputy Inspectr of Schools sanctions at the rate of 1 teacher for thirty-five pupils. Added to this, the teachers are given the task of making collections for the mid-day meal scheme. There is another scheme called the Pilot project. In Tamil they call it. சீரமைப்புத்திட்டம் I am practically pained to say that schools have been converted into choultries, and teachers have been converted into cooks under two projects. Infact nobody can deny that there is need to feed the poor children. It is a social problem, which I have been submitting on the floor of this House not only in connection with the provision made for it under 'Education' in the budget but also in other respects. If the children are really hungry, the mothers must be hungry. We live in India, where the child is called 'darling'. The father may take his tiffin in a hotel or his meal in a hotel. but the mother would deny herself food so long as her children are hungry. This is a social problem. If the Government come to the conclusion that all the children are hungry, naturally the mothers must be more hungry. This must be admitted. Nobody can deny this. This is only a social problem, and it must be tackled separately. The teacher should have no connection with these problems. The Government have their own men. They have got non-officials. There can be committees called food committees in every place. All the poor children can be given free meal tickets. The children can go in the interval to a place to be called the feeding centre. This business of collecting funds, rice or grain and other resources and also the business of just making arrangements for cooking and feeding the children must be entrusted to non-official committees with which the teacher or the headmaster of the elementary school should have no connection whatsoever. We had an occasion to pass a Bill saying that anybody in charge of the gift articles for this mid-day meal schemes would be liable to punishment with fine or imprisonment, and so on, for certain lapses. Why should the teacher take all the risk? Is it their duty to see that the children get the mid-day meal? If the

4-50 p.m.

Governmnet want to bring in more children into the school, it is a liability of the Government. During the days of the British and even in our own days, we had been threatening the people with a fine from 12 annas to Rs. 7–8–0 in respect of compulsory elementary education. Now we have rightly changed our procedure. We thing that if really our chilren are given a meal, they would be think that if really our children are given a meal, they would be attracted to the school. But, of course, from the cultural point of view, it is not at all right. It is more a question of the utility of the educational curriculum that makes the child go to the school than the question of meal. Can I say that these children were really hungry before this mid-day meal was given? It is a social problem. Before children have to be fed, the mothers have to be fed. But let this not be mixed up with the educational problem. Not only in respect of expenditure but also in respect of work, the teacher and the headmaster of an elementary school should have nothing whatsoever with these two projects. Really we welcome the two projects. We want parental Co-operation. We want the parent to contribute to the mid-day meal.

Sometimes I had occasion to hear Members saying that G. Krishnamoorthy was speaking more about the teachers than the pupils. What is the harm there? I have been elected to the Legislative Council by the teachers, and there are 1,13,000 teachers. Each teacher has at least six members is his family. The total number comes to about seven lakhs of subjects in the State. There is no harm in pleading again and again till I get the things achieved for these seven lakhs of people. They are starving. They are getting below the living wage. So there is no harm in my pleading the cause of the teachers. But let it not be understood that I or the teachers are against the question of feeding the children. We are feeding the children. We are living in a land where it has been laid down Athiti Devo Bhava ', i.e., one should treat the guest as God, and feed him. But we are submitting that this is a social problem and should not be mixed up with the educational problem.

The paragraph in the address clearly shows that we have quantitatively expended. Have we expended quantitatively (?) What about curriculam (?) After 15 years of getting independence, we are still have practically the same curriculum. There is much rush in the school curriculam we want to teach the pupil in the first standard or the second standard knowledge about all the subjects under the Sun. So much so, we have gone far, far away from the old ideal of teaching the Three "Rs" to these children. The young child is not able to read Tamil, his mother tongue. claerly, speak clearly and write clearly. That is the position. So, we are aiming too much in the case of children. Now, with regard to these two projects, I have to submit this point The Government have now decided on to this. Let us give at least one meal to all the children. Let them not be hungry, when they sit at the school. Let them be fed with the help of parents, donors, and others. Now what about this question. There are forty children, all well fed and well dressed, and the

whole school is equipped with furniture given by the public under the school improvement scheme. If there is not a teacher, before these forty boys, can we call it a class. If there are many classes without teachers, can we call it an institution? Why should the Government forget that one person, who is responsible for converting these forty children into a class, has not been given a living wages (?) We have had two five year plans. We are in the third plan now. Over Rs. 10,000 crores have to be spent. Our State alone has to spend Rs. 300 crores. Have we given priority to education when we are thinking of the five year plans? We had a pay Commission. The Pay Commission recommended a minimum salary of Rs. 100 for a white-collared job. Still there are teachers in the scale of Rs. 65 plus Rs. 10 and Rs. 55 plus Rs. 10. Are they not having white-collared jobs. Do they go to schools without shirts or without decent dress that is prescribed under the rules? Why should they be denied this Rs. 25 difference between Rs. 75 and Rs. 100. When the whole country is out for expansion, the minimum salary that has been laid down by the Pay Commission has been denied to teachers, who number about 64,000 out of 1,13,000 in the whole State.

Coming to the next grade of teachers whom we call Secondary Grade trained teachers, a person who passes his S.S.L.C. examination and undergoes two years' professional training, is being given only a salary that another person with the S.S.L.C. qualification but without training gets under the Government. No recognition is given to his qualification and training. How then would the parents regard the teacher? We see so much indizipline. There is no special value attached to the qualification that the teacher acquires by undergoing training for two years. Hon. Members will be surprised to hear that our Constitution lays down that there should be equality of opportunities and that there should be equal pay for equal work. Even after the recommendation of the Pay Commission, that is, even after about two years from 1st June 1960, there are about 2,000 teachers, who have the S.S.L.C. qualification plus the two years' training and who are asked by this Government to draw only Rs. 75 instead of Rs. 100. They just say, 'Well, gentlemen, you are all working in Higher Grade posts, Higher Grade though called Higher means a pass in III Form and two years's training while Secondary Grade means, a pass in S.S.L.C. and two years' training. These 2,000 Secondary Grade teachers are getting only Rs. 75 now. This has been going on even after the recommendation of the Pay commission has been given effect to. There are about 2,000 teachers in this group. A person passes his examination and undergoes training in the expectation that he will get the minimum salary that has been prescribed by the Government. But the Government say, 'Well, that is the Higher vacancy; we give you Rs. 65 plus Rs. 10 and not Rs. 90 plus Rs. 10. This injustice should be redressed at once.

Then I come to the Secondary Grade teachers, in whose case alone of all the teachers in this State, the increment is to go on a decending scale. He has to start on Rs. 90 go on to Rs. 100 Rs. 90–4–110 and then get an increment of Rs. 3 up to Rs. 140.

[Sri G. Krishnamoorthy] [24th April 1962

There is no other category of teachers who has got this descending scale. The Pay Commission themselves have admitted that the greater the age of a person the greater the responsibility for him with regard to his family and therefore the greater must be the salary given to him. This defect has not been rectified in spite of my repeated requests here. Then we find that there are teachers who are not paid according to qualifications. We are in Tamilnad. We are out to encourage Tamil. Tamil in offices must flourish. Tamil shorthand must flourish. Tamil typewriting must flourish. Tamil vocabulary must be improved. We have set up committees. We are carrying on the work. All these things must go only through the schools. There are the Tamil Vidwans. What about them? The person has to pass his Vidwan course in Tamil. He has to undergo the Pandit's training. Then he has to have the English knowledge. He must have the S.S.L.C. qualification. But when he goes to the school, he is told, 'Well, gentleman, you have got only a Secondary Grade Post here; you can draw your salary in the scale of Rs. 90-140 and not in the I grade of pay where you can get salary like the L.T. in the scale of Rs. 140-250. Fifteen years have passed since we got Swaraj. A man who handles English in IV Form can get Rs. 140-250, but the man who

5.00 p.m. handles Tamil cannot get that scale in Tamil Nad. If he cannot get that in Tamil Nad, where else can he get it? Now do the Governmet encourage Tamil? They do not at all encourgage Tamil. If he takes the trouble of passing the S.S.L.C. examination, the Vidwan examination, the Oriental Title examination and then Pandit's training, he is denied a job in I grade because there is a vacancy only for a II Grade post. He is to handle classes only up to the III Form and not above that. Should we not do this elementary piece of justice when we say that we are out to encourage Tamil?

Now, in the case of the Physical Training Instructors, there are two grades. One gentleman passes the S.S.L.C. examination and lower grade in physical training. The other gentleman passes the Intermediate examination and then he undergoes Y.M.C.A. training. That gentleman is to get only Rs. 5 extra per month. What is the relation between qualification and salary? I really wish that the Hon. the Minister in charge of Education now would be present here. I know that there is joint responsibility of the Government and that these things will be looked into. But I would have very much liked to have his presence here because I want to just put in a new idea, namely, that a committee should be immediately appointed to go into the service conditions of teachers. Out of a lakh and thirteen thousand teachers there are nearly sixty thousand teachers in, what are called, aided primary schools. Even during the question-time to-day it was replied on behalf of the Government that the private managements would not be insisted upon by the Government to do a particular thing, to pay a certain rate of allowance. Then, what reason have the private managements to continue their existence? Are they not under the control of the Government? Are they not aided by the Government under certain stipulations? In these private agency schools or, what are

24th April 1962] [Sri G. Krishnamoorthy]

called, aided schools, sixty thousand teachers are denied security of service. The Hon. the Minister for Industries has given security of service to a worker in a beedi factory and a worker in a hotel. But the Hon. the Education Minister has not come forward to give such security of service to the man who moulds the character of the nation to preserve the freedom won hard by the Father of the Nation under the Congress Regime. When is he to get security of service? He can be sent away on three months' notice or even without such notice with three months' salary. He can be dismissed even without that three months' salary. I had occasion to bring in a non-official Bill, the Teacher Protection Bill on the sacred floor of this House thirteen months ago and it was promised on behalf of the Government that the Secondary Education Act and the Elementary Education Act that were on the anvil would contain provisions, perhaps more secure and favourable than what that Bill demanded. I do not know when these two Acts would see the light of day.

With regard to allowance, Mr. Chairman, I have here repeatedly requested the Government to avoid all disparities. What the teachers have been fighting for is the removal of disparities. It is high time that the teachers were treated as national servants. If at all the label of Government servant is to be stuck, it should be stuck on the face of the teacher first. Irrespective of the agencies he might be working under, he is doing national service and he is handling the same syllabus. Irrespective of the agency, he is inspected by the same Deputy Inspector. He is handling the same children, and under the Directive principles which govern us, we are to be treated as equals. After so much of talk and pressure put upon the Government, we are slowly being recognised on a par with Government servants. But what about security of service? A district board teacher, a municipal teacher or a Government teacher cannot be sent out. We want only those provisions. We say that those provisions may apply to us. There may be people who do mistakes against the Government or against the interests of service. Let them be suspended, let them be paid subsistence allowance, let there be an open enquiry, let explanations be called for, and let the procedings go on as in the case of the Government servants. We want nothing more. So also in the case of allowance, we want to stand on a par with Government servants. From 1946 to 1962 it is sixteen years an allowance called house-rent allowance is denied to teachers in aided institutions. All other teachers are getting it. This house-rent allowance, if given to the teacher, will benefit him to the tune of Rs 15 if he lives in Madras, Rs. 12 if he lives in Madurai or Tiruchirappalli and Rs. 7 if he lives in any other place. After all, the cost to the Exchequer is about Rs. 6 lakhs. Our Government which is getting over Rs. 90 crores by way of income still shrinks back to give this allowance. Why should there be this disparity? Similar is the case with regard to medical concessions. Ther were speeches made here with regard to the examination of hospitals, need for more beds and other things. But what about the teachers who got ailment. Are they

[Sri G. Krishnamoorthy] [24th April 1962

not doing national service? Are they not wasting their lungs and life itself because it is only the number of breaths that count the life of a man? For such people, 60,000 people in aided schools, no medical concession has been given for the last so many years. They are completely denied it, not to speak of the difference between the N.G.O. concession and the Central Government concession. Teachers have not been given concession even on a par with the N.G.Os.

With regard to weightage, I was really pained to see a G.O. issued in February 1962 saying, 'Well, you cannot weightage to all these teachers from 1947, but do not give arrears of pay and arrears of increment on and from 1—6—1960. Now, weightage was given and pay was re-fixed in the case of Government servants in one or two months. Statements were called for and everything was settled. But how is it that in the case of teachers no steps were taken? I had occasion to request on the floor of the House that weekly or fortnightly reports should be called for from the District Educational Officer with regard to fixation of pay and that auditors should fix the pay and so on. Now, during the course of these two years teachers have been paid in different ways. The Deputy Inspector interprets the G.O. in a particular way and the District Educational Officer interprets it in a different way. At the Government level they have issued an order giving weights for service from 1947 irrespetive of the fact that they might have had breaks, and irrespective of the fact that they might have served under different agencies and so on. But the very first speech delivered by me on the floor of the House, as soon as the recommendations of the Pay Commission were published, was that the teachers were quite different from a N.G.O. He has to serve in many institutions. He is kicked like a football for want of security of service. He has to serve in an elementary school and in a high school under the same management or under different managements. That being so, in the case of teachers, the total service of a teacher in recognised schools as entered in the departmental service register must be taken into account for the purpose of giving weightage. And it has taken two years for the Government to decide, 'All right, you count it from 1957, but do not give retrospective effect for payment from 1—6—1960. Do not give them arrears of pay and arrears of increment on and from 1—6—1960.' Why should arrears of pay and arrears of increment be denied for the last two years? What is it that the department was doing all these days? How is it that in the case of the N.G.O.'s everything was settled in a month or two and that in the case of teachers it has taken so much time? Should not the teachers have weightage? Are they not entitled to arrears of pay and arrears of increment? Is it the fault of the teachers or the department? Have not the Government promised that every teacher is eligible for the scale recommended by the Pay Commission from 1—6—1960? How can the Government now go back and say, 'You are eligible for fixation of pay but not eligible for arrears of pay and arrears of increment in cash?' I would request the Hon. the Education Minister to look into this matter.

